இப்போது மலர்களை அலங்காரமாக அடுக்கும் கலை. அதைவிட நுணுக்கமானது பழங்களையும் காய்கறிகளையும் மலர்களாக உருமாற்றச் செதுக்கும் ஸோகெட்டை. இக் கலையில் சிறந்த சிற்பிகளுள் ஒருவரான மீரா ஜான் ஜேக்கப் இந்தியாவில் பிறந்து சிங்கப்பூரில் குடியேறியவர். சமூகப் பணிகளிலும் ஆர்வம் உடையவர். ''வெறும் பொழுது போக்கு மட்டுமல்ல; விருந்தினர் வரும்போது சாப்பாட்டு மேசையை அலங்கரித்துப் பாராட்டுப் பெறவும் இக்கலை உதவும்'' என்கிறார், தமது நூலின் முன்னுரையில். பார்த்துப் பார்த்துப் பரவசமடைவதுபோல் அத்தனை உயர்வாக வண்ணப் படங்களுடன் இவர் புத்தகத்தை (Fruit and Vegetable Carving) வெளியிட்டிருக்கிறது டைம்ஸ் புக் இன்டர்நேஷனல்.

# ஃபோட்டோ பக்கம்

சரித்திரம் பேசும் புராதனமான கட்டிடங்களைத் தகர்த்து விட்டு அவ்விடத்தில் புதிய கட்டிடங்களை எழுப்ப நாம் அவசரப்படும்போது, மேல் நாட்டவர் பழைய கட்டிடங்களை அப்படியப்படியே பாதுகாப்பதில் சிரத்தை காட்டுகின்றனர். மேற்கு பெர்லின் நகரில் உலகப் போரின் போது குண்டு வீச்சில் சேதமாயிற்று ஒரு மாதா கோயில். அதன் பக்கத்திலேயே மிக நவீனமான மாதா கோயிலை எழுப்பிய போதிலும் இடிபாடடைந்த மாதா கோயிலைப் புனர் நிர்மாணம் செய்யாமல் வைத்துள்ளனர். புராதனக் கட்டடக் கலைச் சிறப்பை மட்டுமின்றி யுத்தத்தின் கோரத்தையும் உணர்த்திய படி அது இன்றும் காட்சியளிக்கிறது!

நன்றி: ஸ்காலா



○ ஜெர்மன் கூட்டுறவோடு தயாரிக்கப் படப்போகும் 'மொபெட்' மாடல்கள்.



# மொபெட் புரட்சி!

கி.ராஜேந்திரன்

பசுமைப் புரட்சி, வெண்மைப் புரட்சிக்குப் பிறகு இன்று உருவாகி வருவது மொபெட் புரட்சி! பஸ் கட்டணங்கள் உயர்ந்துவிட்ட நிலையில் புளி மூட்டையாக அடைந்து செல்ல வேண்டியிருக்கும்போது, 'கடன் போட்டாவது ஒரு மொபெட் வாங்கி விட்டால் தேவலாம்' என்று ஏராளமானவர் எண்ண ஆரம்பித்துள்ளனர். பஸ்ஸுக்குக் காத்திருக்கும் நேரத்தை வீட்டில் குடும்பத்துடன் செலவழிக்கலாம். ஒருவருக்கு இருவராய்ப் பயணப்படும்போது மிச்சமாகும் கணிசமான பஸ் கட்டணம், கடனைத் திருப்பித் தர உதவும். இப்படிக் கணக்குப் போடுகின்றனர்.

இந்த ஆர்வத்தைப் பயன்படுத்திக்கொள்ளத் தயாரிப்பாளரிடையே ஒரு மொபெட்

கபில்தேவ்-என்பீல்ட் மோட்டார் சைக்கிளில்..



○ என்பீல்டு தொழிற்சாலையில் ஓர் உள் தோற்றம்

ரேஸும் நடக்கிறது. 25 ஆண்டுகளாக மோட்டார் சைக்கிள்கள் தயாரித்து வந்துள்ள என்ஃபீல்ட் நிறுவனம் இந்த ரேஸில் கலந்து கொள்ளாதிருக்குமா?

ஜப்பான், இத்தாலி, ஜெர்மனி என்று பல நாடுகளுக்கும் என்ஃபீல்ட் நிபுணர்கள் பறந்து சென்று பலருடன் பேசி, ஆய்வு நடத்திய பின்னர் ஜெர்மானிய நிறுவனமான ஸுண்டாப்புடன் ஓர் ஒப்பந்தம்செய்து கொண்டிருக்கின்றனர்.

''ஜப்பானிய மோட்டார் சைக்கிள்கள் தாமே உலகப் பிரசித்தி?''

''இருக்கலாம்'' என்கிறார் என்ஃபீல்ட் மானேஜிங் டைரக்டர் விசுவநாதன். ''ஆனால் நமது சாலைகளைக் கவனத்தில் கொண்டு அதற்கேற்ப உறுதியான வா னங்களை உருவாக்க வேண்டாமா? மோட்டார் சைக்கிள் தயாரிப்புத் துறையில் ஸுண்டாப்புக்கு 60 வருஷ அனுபவம் உண்டு. பெட்ரோல் சிக்கனத்தில் இவர்கள் கருத்துச் செலுத்துவது பிளஸ் பாயிண்ட்!''

ஸுண்டாப்பைத் தேர்ந்தெடுத்துவிடலாம் என்ஃபீல்ட். ஆனால் ஸுண்டாப் சம்மதிக்க வேண்டாமா?

ஆரம்பத்தில் தயங்கத்தான் செய்தார்கள். காரணம் இந்தியாவில் தொழில் வர்த்தகத் துறைக்கு உள்ள ஏகப்பட்ட அரசாங்கக் கட்டுப்பாடுகள்; தொழில் வளர்ச்சிக்கான அடிப்படைத் தேவைகள் கவனிக்கப்படாத நிலை.

''உங்களுக்கேன் கவலை? அறிவாற்றலை வழங்கிவிடுங்கள்; திட்டத்தை அமல்படுத்தும் பொறுப்பை எம்மிடம் விட்டு விடுங்கள். இந்தியச் சூழல்தான் எங்களுக்கு அத்துபடியாயிற்றே?'' என்றார் விசுவநாதன். அந்தத் தன்னம்பிக்கை காரணமாக ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று.

○ என்பீல்டு மானேஜிங் டைரக்டர் திரு. எஸ். விசுவநாதன்

ராணிப்பேட்டையில் அமையப் போகிறது தொழிலகம். அதற்கு ஆண்டொன்றுக்கு 90000 வாகனங்கள் உருவாக்கும் ஆற்றல் இருக்கும். எதிர்காலத்தில் மக்கள் எந்த ரக மோட்டார் சைக்கிளை விரும்புவார்கள் என்பது நிச்சயமில்லை. ஆனால் எந்த ரகத்தை அவர்கள் விரும்பினாலும் சப்ளை செய்ய என்ஃபீல்ட் சித்தமாக இருக்கும். இதற்கேற்ப 50 ஸி.ஸி. முதல் 163 ஸி.ஸி. வரை நாலு வகை மாடல்களைத் தயாரிக்கப் போகிறார்கள்! 27 கோடி முதலீடாகும். 1200 பேருக்குப் புதிதாக நேரடி வேலை வாய்ப்பு. விற்பனை, ஸர்வீஸ் போன்ற வகைகளில்மேலும் 10000 பேர் பயனடைவார்கள்.

ஸுண்டாப் நிறுவனத்தின் தலைவர் நியூமேயர் அண்மையில் சென்னை வந்திருந்தார். ராணிப்பேட்டை தொழிலகத்துக்கான ஆரம்பக் கட்டப் பணிகளைப் பார்வையிட்டார். பிறகு சொன்னார்: ''விசுவநாதன் தலைமையில் இயங்கும் என்ஃபீல்ட் நிர்வாகம் உலகில் வேறு எந்த நிர்வாகத் திறனுக்கும் சளைத்ததல்ல. என்ஃபீல்டுடன் ஸுண்டாப் இணை

சேர்ந்து செயலாற்ற முடிந்ததில் பெருமைப் படுகிறேன்''

அவர் பரவசத்துக்கு இன்னொரு உதாரணமும் கிடைத்தது. ஒப்பந்தப்படி இங்கு தயாராகும் மொபெட்கள், மோட்டார் சைக்கிள்களை ஐரோப்பா அமெரிக்கா தவிர வேறு நாடுகளுக்குத்தான் ஏற்றுமதி செய்யலாம். ஆனால் நியூமேயர் சொன்னார்: ''என்ஃபீல்ட் தயாரிக்கும் மோட்டார் சைக்கிள்களை நாங்களே வாங்கி விநியோகிக்கத் தீர்மானித்தால் வியப்பதற்கில்லை!''

உபசாரத்துக்காகப் பேசுகிறவர்கள் அல்ல மேற்கு ஜெர்மானியர். விசுவநாதனின் நிர்வாக ஆற்றலில் அவர் கவரப்பட்டதிலும் வியப்பில்லை.

என்ஃபீல்ட் நிறுவனத்தின் மானேஜிங் டைரக்டராக விசுவநாதன் பொறுப்பேற்று ஐந்து ஆண்டுகளே ஆகின்றன. அதுவரை ஏகமாக நஷ்டப்பட்டுக் கொண்டிருந்த நிறுவனத்தை மந்திர ஜாலம் போல் மாற்றி அமைத்தார். குவிந்திருந்த நஷ்டங்களைத் துடைத்தெறிந்ததோடு சென்ற ஆண்டில் வரியெல்லாம் செலுத்திய பின் கிட்டத்தட்ட இரண்டரைக் கோடி லாபம் காண்பித்தார். பங்குதாரர்கள் மகிழ்ச்சி அடையக் கேட்கவா வேண்டும்?

''எப்படிச் சாதித்தீர்கள்?'' என்றால் அடக்கம் காரணமாக அதிகம் பேசுவதில்லை விசுவநாதன். ஆனால் அவர் ஒரு நாள் நடவடிக்கைகளைக் கவனிக்கும்போது நமக்குப் புரியவே செய்கிறது. வள்ளுவர் வாக்குப்படி 'இதனால் இதனை இவன் முடிக்கும் என ஆய்ந்து அதனை அவன்கண் விட்டு'விடுகிறார். தட்டிக் கேட்கிறார், தலையிடுவதில்லை! ஆனால் தொழிலாளர் நலனைப் பொறுத்த மட்டில் அவரே நேரடியாகக் கவனிக்கிறார்.

நிர்வாகத்தில் தொழிலாளர் பங்கு என்று பரவலாகப் பேசப்படுவதை விசுவநாதன் அமல்படுத்தியிருக்கிறார். அவர் திரும்பத் திரும்பத் தொழிலாளர்களிடம் கூறுவது இதுதான்: ''இதை ஏதோ என் நிறுவனம் என்று எண்ணாதீர்கள். என் முதலீடு மிகக் குறைவு. பொதுமக்களும் பாங்குகளும் என்னால் இவற்றைச் சாதிக்க முடியும் என்று நம்பி ஏராளமாய்ப் பணம் போட்டிருக்கிறார்கள். பொதுவுடைமையான பாங்குகளின் செல்வம் இங்கே முதலீடாகிறது எனில் அது பொதுமக்கள் பணம்தானே; உங்கள் பணம்தானே?'' தொழிலாளர்கள் புரிந்து கொண்டு ஒத்துழைப்புத் தருகிறார்கள். தொழிற்சங்கத் தலைவர்கள் (சித்தன், சுந்தரம்) தங்களுக்கு வேலை குறைவு என்பதால் மகிழ்ச்சியோடு இருக்கிறார்கள். திருஷ்டி விழாமல் இருந்தால் சரி!

என்ஃபீல்ட் நிறுவனம் லாபம் காண முக்கிய காரணம் புல்லெட் மோட்டார் சைக்கிள்களின் உற்பத்தியும் விற்பனையும் சென்ற ஆண்டில் ஏகமாக அதிகரித்ததுதான்.

''போலீஸும் ராணுவமுமே நிறைய வாங்கிக் கொள்வார்களோ?''

''தவறான கருத்து'' என்று திருத்துகிறார் விசுவநாதன். ''போலீஸ்–ராணுவத்துக்குப் போவது உற்பத்தியில் ஏழு சதம் தான். மலைத் தோட்டப் பகுதிகள், சிறு நகரங்கள், கிராமங்களிலெல்லாம் புல்லெட் ஒரு ஸ்டேட்டஸ் சிம்பலாகவும் ஆண்மைக்கு அறிகுறியாகவும் கருதப் படுகிறது. ஆயுட்கால நண்பனாகி விட்டது. குறிப்பாக வளம் மிக்க பஞ்சாப்! திருமணம் என்றால் மாப்பிள்ளைக்கு ஒரு புல்லெட் பரிசு இல்லாமல் நடக்காது!''

''புதிய லைட்வெயிட் மோட்டார் சைக்கிள் அல்லது மொபெட்டுக்கு டெபாஸிட் கேட்பீர்களா?''

''அம்மாதிரி நிர்வாகத்தில் எனக்கு நாட்டமில்லை'' என்று முகம் சுளிக்கிறார் விசுவநாதன்.

'ஸ்கூட்டர்களுக்குப் பதிவு செய்துகொள்ளுங்கள்' என்று விளம்பரம் செய்து ரிஜிஸ்திரேஷன் ஃபாரத்துக்கே 5 ரூபாயும் பிறகு விண்ணப்பத்துடன் 500 ரூபாயும் வசூலித்து சில ஸ்கூட்டர் நிறுவனங்கள் 50 கோடி 60 கோடி என்று சம்பாதித்துவிட்ட நிலையில் தான் விசுவநாதன் இப்படிப் பேசுகிறார். பதிவுசெய்து கொண்டவர்களைக்கிட்டத்தட்ட லாட்டரி முறைப்படி வரிசைப்படுத்தி ஸ்கூட்டர் வழங்கி வரும்போது கடைசி நபருக்கு ஸ்கூட்டர் கிடைக்க 5 என்ன, 50 ஆண்டுகள் ஆனாலும் வியப்பில்லை!

திருவொற்றியூரில் இயங்கி வரும் என்ஃபீல்ட் மோட்டார் சைக்கிள் தொழிலகம் தவிர பின்தங்கிய மாவட்டத்தில் தொழில் தொடங்க வேண்டும் என்று அணைக்கரைப் பட்டியிலும் ஒரு என்ஃபீல்ட் தொழிலகம் உள்ளது. பசுமைப் புரட்சிக்கு உதவப் பலரக இயந்திரங்களை உருவாக்கும் அக்ரோ இன்ஜின்ஸ் என்ற தொழிலகமும் திருவான்மியூர் அருகே என்ஃபீல்டின் முயற்சியால்தான் சிறப்பாக நடந்து வருகிறது. ஆப்பிரிக்கா, மத்திய கிழக்கு போன்ற உலகின் பல பகுதிகளுக்கு ஏற்றுமதியும் செய்து அந்நியச் செலாவணி சம்பாதிக்கின்றன இத்தொழிலகங்கள்.

தொழிலகங்களைத் திறம்பட நிர்வகிப்பது போலவே தமது வாழ்க்கையையும் கச்சிதமாக நிர்வகித்துக் கொள்ளும் விசுவநாதன் தினம் காலையில் ஒரு மணி நேரம் டென்னிஸ் ஆடத் தவறுவதே இல்லை. மாலை நேரங்களில் உயர்தரமான கலை நிகழ்ச்சி எங்கு நடந்தாலும் இவரைக் காணலாம். கலாக்ஷேத்திரத்தின் வளர்ச்சியில் மிகுந்த அக்கறை எடுத்துக்கொண்டுள்ள இவர், கலாமந்திர் டிரஸ்ட் என்ற அமைப்பையும் போஷித்து வருகிறார். கலாமந்திரின் லேட்டஸ்ட் முயற்சி: குருவும் சீடரும் சேர்ந்து அளிக்கும் கலை நிகழ்ச்சி. குரு முதலில் சற்று நேரம் தமது பாணியின் தனித் தன்மையை விளக்கி, ஆடி அல்லது பாடிக் காட்டிய பிறகு சீடர் தாம் பயின்ற கலையை ரசிகர்களுக்கு விருந்தாக்குவார்.

சபரிமலை செல்லப் போவதால் நோன்பிருந்து இன்று உடல் இளைத்துக் காணப்படும் விசுவநாதனின் வாழ்க்கைத் துணைவியார், அபூர்வமாக, ஆனால் ஆழமாகச் சிறுகதைகள் வடிக்கும் எழுத்தாளர் ''விசுவப்ரியா''.



# ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

**கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன**

| 1-வருடம் | 2-வருடங்கள் | 3-வருடங்கள் | 5-வருடங்கள் |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 22% |

நான்கு ஆண்டுகளில் 'சுமங்கலி டெபாசிட் திட்டத்தில்' தங்கள் முதலீடு இரட்டிப்பாகிறது ரூ. 5000/ம் அதற்கு மேலும் டெபாசிட் செய்பவர்களுக்கு ஒரு அழகிய 'வெள்ளி குத்து விளக்கு' அன்பளிப்பாக வழங்கப்படும்



# ஜெயசக்தி சிட்ஸ் & பைனான்ஸ் பி. லிட்.

எமது புதிய குருப்புகள்

| மாதங்கள் | அங்கத்தினர்கள் | சந்தா தொகை | சீட்டு மதிப்பு |
|---|---|---|---|
| 40 | 40 | 250 | 10,000 |
| 40 | 40 | 125 | 5,000 |
| 25 | 25 | 2000 | 50,000 |
| 25 | 25 | 1000 | 25,000 |
| 20 | 20 | 500 | 10,000 |
| 20 | 20 | 250 | 5,000 |
| 20 | 20 | 100 | 2,000 |

ஏல முறை: காப்புத் தொகையுடன் பகிரங்க ஏலம்.
'காப்புத் தொகை' ஏலத்தன்றே திருப்பித்தரப்படும்.

முதலீடு செய்ய, சீட்டுகள் சேர, தொடர்பு கொள்க :

நிர்வாக அலுவலகம் : 39, நடேச ஐயர் தெரு, 2வது மாடி
(சிவா-விஷ்ணு கோயில் அருகில்)
உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை-600 017 போன் : 447186

பெங்களூர் : 24/1-A, மார்கோசா ரோடு (10வது கிராஸ்) மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003 போன் : 366971
தஞ்சாவூர் : எண் : 2 & 3, முதல் மாடி, ஜி.ஏ. கனால் ரோடு, தஞ்சாவூர். போன் : 1626
திருவண்ணாமலை : 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601 போன் : 483
பட்டுக்கோட்டை : 9-A, தலையாரி தெரு, பட்டுக்கோட்டை. போன் : 453

**C.A. BALOO** Managing Director

**ஜெயசக்தி — நம்பிக்கைக்கு பெயர் பெற்றது**

CHARI

# கலகி ஏப்ரல் 17

புத்தாண்டு சிறப்பிதழ்

இலவச இணைப்பு



## "ஒரு முதல்வரின் கதை"

ஆந்திர மாநில முதல்வர் திரு. என்.டி. ராமராவ் அவர்களுடைய மிக ரசமான, ஆச்சர்யமான வாழ்க்கை வரலாறு

## ஜகத்குருவின் ஆசி



காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளின் அருளுரை ஆரம்பம்.

## பொது அறிவு

கல்லூரி மாணவரும், உயர்நிலைப் பள்ளி மாணவரும் தங்கள் பொது அறிவை வளர்த்துக் கொள்ள வசதியாக ஒரு புதிய பகுதி.

இது ஒரு போட்டி அரங்காகவும் விளங்கி, பொது அறிவில் சிறந்த கல்லூரி மாணவர்களுக்குப் பரிசுகளையும் பெற்றுத் தரும்.

## வாசகர் பாங்கு

ஒவ்வொரு வாரமும் வாசகர்கள் பங்கேற்கக் கூடிய பல போட்டிகள். முதல், இரண்டாவது பரிசுகள் தவிர ஏராளமான ஆறுதல் பரிசுகளும் உண்டு.

# தெய்வ தரிசனம்

ஒவ்வொரு வாரமும் ஒரு புண்ணியத் தலத்தின் மகிமையை எடுத்துக் கூறும் பயணக் கட்டுரைத் தொடர். அருமை மிக்க ஒவ்வொரு கட்டுரையும் ஒரு ரத்தினம்.





# கவிஞர் வைரமுத்து பக்கம்

கவிஞர் வைரமுத்து வாரம் ஒரு பக்கம் கல்கியில் தமது கவனத்தைக் கவர்கின்ற பல்வேறு அம்சங்களைப் பற்றி எழுதி வருவார்.

அவரது எழுத்தாற்றலைப் பற்றி — வித்தியாசமான பார்வையில் விஷயங்களை அவர் அணுகும் முறை குறித்து நாடு அறியும்.



சவிதா எழுதும்

# நேசமுள்ள வான்சுடரே!

தொடர்கதை



### டாக்டர் கேட்ட கேள்வி:

# தம்பி உன் நாய்க்குட்டியின் பெயரென்ன?

அழகர்கோவிலைச் சேர்ந்த அச்சிறுவன் மதுரை பெரிய ஆஸ்பத்திரியில் சிகிச்சைக்காகச் சேர்ந்தான்.

நியூரோ சர்ஜரி டாக்டர் வி. இன்பசேகரன் அச்சிறுவனிடம் "உங்க வீட்டில் நாய்க்குட்டி இருக்கா தம்பி?" என்று கேட்டார்.

"ஐயோ... எனக்கு நாயே பிடிக்காது. எங்க வீட்டிலே நாயும் இல்லே – குட்டியும் இல்லே" என்றான் பதறிக் கொண்டே.

"சரி, சமர்த்துப் பையன். போய் பெட்டிலே படுத்துக்கொள்" என்று அவனைத் தட்டிக் கொடுக்கிறார்.

அன்று மாலே.

டாக்டர் மீண்டும் அவனைப் பரிசோதித்துப் பார்த்துவிட்டு.

"தம்பி, என்கிட்டே மட்டும் சொல்லு. உன் நாய்க்குட்டியின் பெயரென்ன?" என்றார்.

"மணி-மணி" என்று கதறுகிறான் அச்சிறுவன். "ஐயா! மணி என்கிற அந்த நாய்க்குட்டி செத்துப் போச்சு ஐயா" என்கிறான் அழுது கொண்டே.

அந்தச் சிறுவனைப் பற்றிய கேஸ் என்ன வென்று துப்புக் கிடைக்கிறது டாக்டருக்கு.

நியூரோ சர்ஜரி மூலம் அவனைக் குணப்படுத்துகிறார்கள்.

பொதுவாக நாய்க்குட்டிகளுடன் கொஞ்சு பவர்களுக்கு அதன் வயிற்றில் உள்ள பூச்சிகளும் முட்டைகளும் நகத்தில், அல்லது சாப்பாட்டில் கலந்து மனித உடலில் பை மாதிரி வளர வாய்ப்புண்டு. இதற்கு 'ஹைடாடிட்' என்று பெயர். (Hydatid) இந்த ஜவ்வு மாதிரியான தேவையில்லாத வளர்ச்சி இருதயம் மற்றும் மூளைக்குள் வளரவும் வாய்ப்பு இருக்கிறது. இந்தியாவிலும் ஆப்பிரிக்காவிலும் இந்த வியாதி அதிகம்.



"நியூரோ சர்ஜரி வைத்திய நிபுணர்கள் இந்தியாவில் மொத்தமாகத் தொண்ணூறு பேர்களே இருக்கிறார்கள்" என்று இந்த டாக்டர் கூறும்போது நமது அதிர்ச்சி அதிகமாகிறது.

"ஏன் டாக்டர்?"

"வெறும் எம். பி. பி. எஸ். படித்தால் மட்டும் இந்தத் துறைக்குப் போதாது. எம். பி. பி. எஸ். முடித்த பிறகு பொது மருத்துவம் ஓராண்டும், 'இன்டென்ஸிவ்



பூடேப்லி'' நான்காண்டுகளும் எடுக்கவேண்டும். நரம்பியல் சிகிச்சையை அனுபவ ரீதியில் கற்க வேண்டும்.

"பாருங்க, நம்ம நாட்டில் ஒருவருக்குக் காக்காய் வலிப்பு வந்தால் அவர் கையில் சாவியைக் கொடுக்கிறார்கள். அல்லது அவருக்குப் பேய் பிடித்து விட்டது என்று பூசாரியிடம் மந்திரிக்கிறார்கள்.

"அன்பும் பாசப் பிணைப்பும் அதிகம். ஒரு நோயாளிக்கு உடல்நிலை காரணமாக மூளையில் அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டும் என்றால் "வேண்டாம் டாக்டர் எங்களுக்கு இதிலெல்லாம் நம்பிக்கை இல்லே. ஆபரேஷன் செய்யாமல் அவர் செத்தாலும் பரவாயில்லே" என்பார்கள். இது வருத்தப்படவேண்டிய விஷயம்."

டாக்டர் இன்பசேகரனின் வயது முப்பத்து நான்கே. 1979ம் ஆண்டு இன்டர்நேஷனல் காலேஜ் அஃப் சர்ஜன்ஸ் நடத்திய போட்டியில் ஓர் ஆராய்ச்சிக் கட்டுரை எழுதியதற்காக அவருக்கு ஆக்ஸிலியரி அவார்ட் (உலக ரீதியில் 'இளம் விஞ்ஞானி' என்ற விருது) வழங்கப்பட்டது. தமிழகத்திற்குப் பெருமை தரும் செய்தி. இப்பரிசின்

மூலம் பத்தாயிரம் ரூபாய் மதிப்புள்ள மருத்துவப் புத்தகங்களை இலவசமாக வாங்கிக்கொள்ளலாம்.

''நியூரோ சர்ஜரியில் எனக்குக் குருநாதர் டாக்டர் எம். நடராஜன்தான். அவரிடம் எட்டாண்டுகள் உதவியாளருகப் பணியாற்றினேன்.'' என்கிறார் இவர்.

''சென்னை ஜி. ஹெச்சில் ஸி. டி. ஸ்கானர் கருவி வந்திருக்கிறதே டாக்டர்?''

''ஆமாம். இந்த ஸ்கானர் சோதனை மூலம் உடல் முழுவதையும் பரிசோதித்து நோயுற்றிருக்கும் உறுப்பு பற்றிய தகவல்களைத் துல்லியமாய்த் தெரிந்து கொள்ள முடியும். மதுரைக்கும் இக்கருவியை வரவழைக்க முயன்று வருகிறோம்.

''வெளி நாடுகளில் மூளையில் பாதிப்பு ஏற்படுவது சாலை விபத்துக்கள். மற்றும் துப்பாக்கிக் குண்டடி பட்டுத்தான். ஆனால் நம் மாவட்டங்களில் முக்கியமான காரணங்கள் இரண்டு:

ஒன்று முதலில் சொல்லிய நாய் வளர்ப்பு.

இரண்டாவது:

பனைமரத்திலிருந்து விழுவது. கிணற்றில் விழுவது போன்ற விபத்துக்களால் நேரிடுவது.

மூளையின் வலது பாகம் பாதிக்கப்பட்டால் இடது கையில் பாதிப்பு ஏற்படும். அதே போல் மூளையின் இடப் பாகத்தில் பாதிப்பு வில் வலது கையின் அசைவுகள் பாதிக்கும்.

டாக்டர் இன்பசேகரன் புகைப்படக் கலைஞர். அவ்வப்போது சிறுகதை எழுதுவது இவரது பொழுதுபோக்கு.!

பேட்டி: **மன்னை சௌரிராஜன்**



'இந்த எலக்ட்ரானிக் யுகத்தில் இன்னும் எல்.பி. ரிகார்ட் மீது ஊசி முனையை வைத்து ஓட விட்டுக் கொண்டிருப்பதா?' என்று சிந்தித்த விஞ்ஞான உலகு இப்போது ஐந்து அங்குல விட்டத்தில் ஸி. டி. (காம்பாக்ட் டிஸ்க்) இசைத்தட்டு தயாரித்துள்ளது. தட்டு சுழலும்போது அதன் ஒலிக் கோடுகள் மீதாகக் கூரிய லேசர் ஒளிக் கீற்று பாய, சாதாரண எல். பி. இசைத்தட்டுக்களைவிட மிகச் சுத்தமான, துல்லியமான ஒலி வடிவங்கள் கிடைக்கும். டேப் ரிகார்டர் போல முன்னும் பின்னும் வேகமாய்ச் சென்று நமக்குத் தேவையான இடத்தைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளலாம். ஒரு ஸி. டி. ஒரு மணி நேரம் பாடும். ஊசி முனை எதும் இசைத் தட்டைக் கீறுவதில்லையாதலால் தேய்மானமே கிடையாது. லேசர் ஒளிக் கதிர் 3000 மணி நேரம் இசை எழுப்பிய பின் தீர்ந்துபோகும்போது ஊசி மாற்றிக்கொள்வது போல் மாற்றிக் கொள்ளலாம்.

**நன்றி: கார்டியன்**





ஸ்வீடன் சிறைச்சாலைகளில் இடமின்மை காரணமாகச் சுமார் 5000 கைதிகள் காத்துக் கொண்டிருக்கிறார்களாம், சிறைத் தண்டனை அனுபவிக்க. இந்த ஐயாயிரம் கைதிகளும் போலீஸ் பாதுகாப்புடன் ஹோட்டல்களில் தங்கியிருக்கிறார்களாம்!

—'பாதுஷா'






# கல்கி

1983 ஏப்ரல் 10
துந்துபி பங்குனி 27
மலர் : 41 இதழ் : 37




## திரிவேதி ஊதிய சங்கு!

இன்றைய தேர்தல் முறையில் ஆளும் கட்சிக்கு அநீதியான பல அனுகூலங்கள் இருக்கின்றன என்பதைப் பிரதம தேர்தல் அதிகாரியே உணர்ந்து சீர்திருத்தங்களைச் சிபாரிசு செய்துள்ளார்.

தேர்தல் சமயத்தில் வரிப் பணத்தில் பல அபிவிருத்திப் பணிகளை அவசரம் அவசரமாக நிறைவேற்றி மக்களை மயக்க முடிகிறது. அரசாங்க யந்திரத்தையும் அதிகாரிகளையும் ஆளும் கட்சியின் வெற்றிக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்வது சாத்தியமாகிறது. இவ்வாறு நடந்து கொள்ளும்போது ஆளும் கட்சி வேட்பாளர் தேர்ந்தெடுக்கப்பட்டது செல்லாது எனச் சட்டத் திருத்தம் செய்யப்பட வேண்டும்.

கட்சித் தாவலைத் தடுக்க வேட்பு மனுவிலேயே ஒரு நிபந்தனையைப் புகுத்தி வேட்பாளரின் கையெழுத்தைப் பெற்றுவிட வேண்டும். தேர்தலில் பண விரயத்தைத் தடுக்கப் பிரசாரத்தின் கால அளவைக் குறைத்து நிர்ணயிக்கலாம்; மத்திய, மாநிலத்தேர்தல்களை ஒன்றாகவே நடத்தலாம்.

தாறுமாறாகப் பல கட்சிகள் புதிது புதிதாகத் தோன்றுவதைத் தவிர்க்கவும் ஏராளமான வேட்பாளர்கள் ஒரே தொகுதியில் போட்டியிடுவதைத் தடுக்கவும் யோசனைகள் கூறியுள்ளார் பிரதம தேர்தல் அதிகாரி திரிவேதி.

கட்சிகளுக்குக் கம்பெனிகள் நன்கொடைகள் தருவதைத் தடுக்க இன்று சட்டம் இருந்த போதிலும் கறுப்புப் பணம் தாராளமாகக் கைமாறுகிறது. இதை உத்தேசித்துத்தானோ என்னவோ, அரசியல் கட்சிகளுக்குக் கம்பெனி நன்கொடைகளை அனுமதிக்கலாம் என்றும் அரசியல் கட்சிகளை ஆடிட் போன்ற பல கட்டுப்பாடுகளுக்கு உள்ளாக்கலாம் என்றும் தெரிவிக்கிறார் திரிவேதி. தனிநபர்கள் நன்கொடைகளுக்கு வரிவிலக்கே தரலாம் என்கிறார்.

கம்பெனி நன்கொடையை அனுமதித்து அரசியல் கட்சிகளை ஆடிட் செய்தால் மட்டும் கறுப்புப் பணம் ஒழிந்து விடுமா என்ன? அல்லது தேர்தல் சமயத்தில் கறுப்புப் பணம் விளையாடுவதைத் தடுக்கத்தான் முடியுமா? கறுப்புப் பணத்தின் ஆதிக்கம் தேர்தல் சமயத்தில் மட்டு






மின்றி நாட்டின் பொருளாதாரத்திலிருந்தே ஒழிந்து போக வழி, பர்மிட்-லைசென்ஸ்—கோட்டா முறையை ஒழிப்பதும் அபரிமித வரிகளைக் குறைப்பதும்தான். சுதந்திரப் பொருளாதாரத்தில்தான் கம்பெனிகள் அரசாங்கத்தின் தயவை எதிர்பார்க்க நேரிடாது. நன்கொடை தருவதும் தராததும் பங்குதாரர்களின் விருப்பமாக இருக்கும். அல்லாதவரை கம்பெனி இயக்குனர்கள் கறுப்பாகவோ வெளுப்பாகவோ சட்டத்தை அனுசரித்துத் தந்துவிட்டுக் கட்சி ஆட்சிக்கு வந்ததும் தமது நிறுவனத்துக்குச் சலுகைகளைத் தேடுவார்கள். கறுப்புப் பணப் பொருளாதாரத்தின் உடன் விளைவான பண வீக்கம், விலைவாசி உயர்வு, தேர்தலில் பண பலத்தின் ஆதிக்கம் போன்ற எல்லாத் தீமைகளையும் ஒழித்துக்கட்ட வல்லது கட்டுப்பாடுகளற்ற சுதந்திரப் பொருளாதாரமே.

திரிவேதி வெளியிட்டுள்ள சீர்திருத்தங்களைச் சட்டமாக்க வேண்டிய நிலையில் உள்ள இ.காங்கிரஸ் அதைச் செய்யுமா? சந்தேகமே. அது தேனையும் எடுத்துப் புறங்கையையும் நக்கிப் பழகிவிட்ட கட்சி. தேர்தல் பிரசாரத்துக்குப் பிரதமர் பயன்படுத்தும் விமானப் படை விமானத்துக்கு வாடகையை டாக்ஸி கட்டணத்தை விடக் குறைவாக நிர்ணயிக்கக் கற்றுக் கொண்டவர்கள், அந்த பில்லைத் தயாரிக்கவே பலமாதங்கள் தாமதப்படுத்திப் பலனடைகிறவர்கள், திரிவேதியின் கருத்துக்களை மதிக்கவா போகிறார்கள்?

---

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்



# பாலிஸி பணத்தைப் பெறுவது எப்படி?

**எல்.ஐ.ஸீயில் பாலிஸி பணத்தைப் பெறுவது பகீரதப் பிரயத்தனமாக இருக்கிறதே என்று குற்றம் சாட்டிய போது....**

● திடீரென்று நடுத்தர வயது மதிக்கத் தக்க ஒருவர் இறந்து போய் விடுகிறார். குடும்பத்தினருக்குப் பிரிவினால் இருக்கும் சோகம் ஒருபுறம்: மறைந்தவர் வைத்துள்ள இன்ஷூரன்ஸ் பாலிஸி பணம் கிடைக்கவில்லையே என்கிற யதார்த்தமான கவலை வேறுபுறம்.



முதலாவது தவிர்க்க இயலாதது: இரண்டாவது?

''சரியான தகவலைக் கொடுத்து ஒத்துழைத்தால் பல சிக்கல்களைத் தவிர்க்கலாம்'' என்கிறார் திரு ரங்கராஜன் — எல். ஐ. ஸி. பிராந்திய மானேஜர்:

''பலருக்குத் தெரியாதது — அல்லது முக்கியத்துவம் கொடுக்காதது ஒன்று உண்டு. பாங்கில் பாலிஸியைக் கடனுக்காக அடமானம் வைக்கிறார்கள். கடன் அடைந்த பிறகு பாலிஸியைத் திரும்பப் பெறும்போது, பாலிஸிதாரர் பெயருக்கு மாற்றி விடுகின்றனர். (reassign) எப்போது ஒரு தரம் assign செய்கிறார்களோ அப்போதே வாரிசுதாரரின் உரிமை போய் விட்டது. எனவே மறுபடியும் வாரிசுதாரரை (ஏற்கனவே உள்ள அல்லது புதிய) நியமனம் செய்தாக வேண்டும். பாலிஸியைத் திரும்பக் கொடுக்கும்போது பாங்குகளும் இது பற்றிச் சொல்லி உதவலாம்.''

இன்னொரு முக்கிய விஷயம். ஒருவர் இறந்தவுடன் மரணத்தைப் பற்றிய அறிவிப்பு குறிப்பிட்ட கிளை ஆபீசுக்கு அனுப்ப வேண்டும். பலர் டிவிஷனல் ஆபீசுக்கு அனுப்புவதால் தகவல் கிடைக்கத் தாமதம் ஆகிறது. (இந்தத் தகவலை யார் வேண்டுமானாலும் தெரிவிக்கலாம் — மரணச் சான்றிதழுடன்.)

''விபத்து மூலம் மரணம் நேர்ந்தால்?''

போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட், போலீஸ் விசாரணையுடன் அனுப்ப வேண்டும்.

''சில சமயம் எக்ஸ்ட்ரா பிரீமியம் கட்ட வேண்டியிருக்கிறதே. பின்னால் ஏதாவது சிக்கலை அது ஏற்படுத்துமோ?''

''கிடையாது. சொல்லப் போனால் அது அனுகூலம் கூட. எல்லா உண்மைகளையும் மறைக்காது பாலிஸிதாரர் தெரிவித்திருந்தார் என்பதற்கு அது ஓர் அத்தாட்சி மாதிரி''

வாரிசுதாரர் பற்றி உரிமையில் தகராறு வந்தால்?''

''கோர்ட் முடிவு செய்யும். ஒரு சம்பவம் ஞாபகத்துக்கு வருகிறது. இள வயதில் ஒருவர் இறந்து விட்டார். மாமியாருக்கும் மருமகளுக்கும் தகராறு. 'நாமினி' தாயார். யார் பேச்சையோ கேட்டு மருமகள் பாலிஸியைக் கிழித்துப் போட்டு விட்டாள். இத்தனைக்கும் பாலிஸி தொகை சொற்பம்தான்;

ஆயாயிரமோ என்னவோ. நாங்கள் குறுக்கிட்டுச் சமரசம் செய்து, பணத்தைக் கொடுத்தோம்.'' என்று சொன்னார் திரு ரங்கராஜன்.

பாலிஸி எடுக்கும்போதே முன்னெச்சரிக்கையாக இருக்க வேண்டிய விஷயங்கள்:

(1) வாரிசுதாரர் நியமனம்.

(2) வயது — குறிப்பிட்ட சான்று காட்டி ஏற்றுக்கொள்ள வைப்பது.

(3) பாலிஸி பற்றின விவரத்தை வாரிசுதாரருக்குத் தெரிவித்தல்.



(4) விலாச மாற்றத்தை எல். ஐ. சி. ஆபீசுக்குத் தெரியப்படுத்துவது.

''பொதுவாக விரைவில் செட்டில் செய்யச் சில அதிகாரங்கள் எங்களுக்குஉண்டு. ஆனால் அதைப் பயன்படுத்தப் பொதுஜனங்களும் உதவ வேண்டும். ஒரு சின்ன உதாரணம் சொல்கிறேன்.

''ஒரு சமயம் நவ. 7ந் தேதியுள்ள செக்கை டிசம்பர் முதல் வாரம் 'பிரிமியத்' துக்காகக் கொண்டு வந்திருந்தார். கவுண்டரில் வாங்க மறுத்து விட்டார்கள். அவர் என்ன காரணமென்று அமைதியாகக் கேட்டிருக்கலாம். அதை விட்டுவிட்டு ஏகமாகக் கூச்சல்போட்டு விட்டார். தேதியைத் திருத்திக் கொடுக்குமாறு கேட்டுக் கொண்டேன். காரணம் என்னவென்றால், நவம்பர் 7ந் தேதிக்கும் டிசம்பர் முதல் வாரத்துக்கு மிடையே பாலிஸிதாரர் இறந்திருந்தால் சிக்கல் வரக் காரணம் உண்டு என்று விளக்கினேன். ஆனால் தபாலில் வரும் செக்குகளுக்குச் சில நாட்கள் அவகாசம் உண்டு. — பாலிஸிதாரர்களின் ஒத்துழைப்பு எங்களுக்கு மிகவும் தேவை'' என்று முடித்தார் ரங்கராஜன்.

—தமயந்தி

---

17 வகைகளில் நூற்றுக்கும் மேற்பட்ட ரோஜாச் செடிகளை வளர்த்து வரும் இந்தப் பெண்மணி அதிகாலை எழுந்ததும் அனைத்துப் பூக்களையும் பறித்து, பள்ளி, கல்லூரிகளில் பயிலும் மாணவிகளுக்கு இலவசமாகவே கொடுத்து வருகிறார். இதனால் தினசரி இவர் இல்லத்தின் முன்னால் ஏராளமான மாணவிகள் படையெடுத்து வருகின்றனர்.

யார் இந்தப் பெண்மணி?

மதுரை மேயர் எம். பட்டுராஜனின் துணைவியார் சரோஜினி பட்டுராஜன் தான்.

—மதுரை மீனாட்சி

படம்: பி. ராஜ சேகர்





கடந்த வாரம் நான் பண்ருட்டியிலிருந்து கடலூருக்கு ரயிலில் சென்று கொண்டிருந்தேன். அப்போது டிக்கட் பரிசோதகர் அனாதையாய்க் கிடந்த ஒரு மூட்டையை அவிழ்த்ததும் அனைவரும் ஆச்சரியத்தில் ஆழ்ந்தோம். ஆம்! மூட்டையில் பிள்ளையார் சிலைதான் (கற்சிலை) இருந்தது. அச்சிலையைக் கடலூர் ஸ்டேஷன் மாஸ்டர் பெற்று ''ஓடிவந்த பிள்ளையார்'' எனப் பெயர் சூட்டித் தினமும் வழிபாடு நடத்துகிறார்!

—விஜயா நெடுஞ்செழியன்

# தண்ணீரைச் சிக்கனமாகச்

○ பி. பழநி, சென்னை-43

? முதல்வர் இப்போது வாரி வழங்குவது இல்லையா? எங்கு சென்றாலும் பெற்றுக்கொண்டே இருக்கிறாரே?

! சினிமா வருமானம் ஏதும் இல்லாத நிலையில் எப்படி வாரி வழங்கிக் கொண்டே இருக்க முடியும்? இப்போது பெற்றுக் கொண்டால்தான் தேர்தல் நேரத்தில் வாரி விட முடியும்.

○ முனியே அழகப்பன், நமனக்கரைப்பட்டி

? சம்சாரம் என்பது வீணையா?

! வாசிப்பவரைப் பொறுத்து வினையாகவும் மாறுவதுண்டு.

○ கே. பசுபதி, கும்பகோணம்

? துணுக்கு எழுத்தாளர்களைக் கிண்டல் செய்து சுஜாதா கட்டுரை எழுதியிருக்கிறாரே அகம்பாவத்தினால் தானே?

! துணுக்கு எழுத்தாளர் வளர்ச்சியில் அக்கறையினாலும் இருக்கலாமே?

○ வி. கே. துரைசாமி அய்யர், திருவானைக்காவல்

? அட்டன்பரோவின் காந்தி படம் அயல் நாடுகளில் பிரமாதமாக ஓடிச் சிறப்பான ஐந்து பரிசுகளையும் பெற்றபின் இங்குள்ளவர்கள் இன்னமும் குறை கூறிக்கொண்டிருக்கின்றனரே?

! இந்தப் பாபத்துக்குப் பிராயச்சித்தமாக அட்டன்பரோவுக்கு ஒரு பாரத ரத்னா வழங்கட்டும் பாரத அரசு.

○ எஸ். வி. ராஜசேகர், சென்னை-5

? சிலுக்கு தனக்குக் கொஞ்சம் அரசியல் தெரியும் என்கிறாரே? கொஞ்சம் அரசியல் என்றால் என்ன? முழு அரசியல் தெரியும் என்றால் என்ன?

! சினிமாவில் சான்ஸ் இருக்கும்வரை கொஞ்சம் அரசியல் தெரியும். சினிமாவில் கிராக்கி குறைந்தால் முழு அரசியல் தெரியும்.

○ வெ. லட்சுமி நாராயணன், வலங்கைமான்

? தண்ணீரைச் சிக்கனமாக எப்படி செலவழிப்பது?

! அண்மையில் ராதுவின் கிருஷ்ண விலாஸ் நாடகம் பார்த்தேன். தங்கவேலுவுக்கு முன் ஒரு சொம்பு நீர் கொண்டு வந்து வைக்கிறார் சரோஜா — குளிக்க. நண்பர் அதிசயிக்கிறார். ''இதில் எப்படிக் குளிப்பது?'' ''குளித்து, துணி துவைத்தும் விடுவேன்'' என்கிறார் தங்கவேலு. ''எப்படி?'' நீரைத் தொட்டுத் தொட்டு உடம்பில் தடவிக் கொள்வதாம்! சோப்பை மேலே பூசிக் கொள்வதாம்! காய்ந்தவுடன் உரித்து எடுத்து விடுவதாம்! துணியின் முனைகளை நனைத்துப் பிழிந்து உலர்த்துவதாம்! நடித்துக்காட்டியபோது, அப்பப்பா! சென்னை தண்ணீர்க்கஷ்டத்தால் கண்ணீர் விட்டுக் கொண்டிருப்பவர்களை மறுபடி சிரிப்புத் தாங்காமல் அழ வைத்து விட்டார் டணால்!

○ வாணஸ்ரீ, வேலங்காலி ★

? இங்கே குதிரைப்பந்தயத்தை ஒழித்தால் அண்டை மாநிலங்களுக்குப் போய் ஆடுவார்கள் என்கிறாரே எஸ். டி. எஸ்.?

! இங்கே குதிரைப் பந்தயம் ஒழிந்தால் அண்டை மாநிலம் செல்வார்கள்; மது விலக்குக் கொணர்ந்தால் அண்டை மாநிலம் செல்வார்கள்; லாட்டரி ஒழிந்தால் அண்டை மாநிலலாட்டரி வாங்குவார்கள். பிரவேச வரி இங்கு ஒழிப்பானேன். அண்டை மாநிலத்தில் இல்லையா? டெலிஃபோன் இங்கு வேலை செய்யவில்லை என்றால் என்ன, அமெரிக்காவிலேயே ஃபோன் சீப்போராகிறதே? லஞ்ச ஊழல் இங்கு மட்டுமா, உலகம் முழுவதும் காணப்படும் விஷயமாயிற்றே? சால்ஜாப்புகள் கூற நமது அமைச்சர்களுக்குக் கற்றுத் தரவா வேண்டும்?

○ மனோபாரதி, பாண்டிச்சேரி-13

? சிலுக்கு இல்லாத பத்திரிகையும், சினிமாவும் எப்போது ஒழியும்?

! ஏற்கனவே ஒழிந்து விட்டனவே!

○ வெ. சோமசுந்தர ரமணி, மின்பாதை.

? ராஜாஜி கவர்னர் ஜெனரல் பதவிக்குப் பிறகு வேறு எந்தப் பதவியும் ஏற்காமல் இருந்திருந்தால் கௌரவமாக இருந்திருக்கும் அல்லவா?

! ராஜாஜியின் கௌரவம் பதவியால் பாதிக்கப்படுவதல்ல. எந்தப் பதவியும் ராஜாஜியால் கௌரவம் பெற்றது.

○ ஏ. நூறுஜாமுகம்மது நத்தர், அடியக்கமங்கலம்

? சமீபத்தில் கர்நாடகாவில் ஒரு தமிழக பஸ் டிரைவர் சுட்டுக் கொலை செய்யப்பட்டது பற்றி...?

! மாலிக் பாஷாவின் குடும்பத்துக்கு ஆழ்ந்த அனுதாபங்கள். பதினைந்தாண்டுகளாக அரசு பஸ் கார்ப்பரேஷனில் பணியாற்றிய அவர் கடமை வீரராக மறைந்திருக்கிறார். அவர் குடும்பத்துக்குத் தாமதமின்றி மொத்தத்தில் 30,000 ரூபாய் கிடைக்கச் செய்ததில் ஓரளவு ஆறுதல். போலீஸ்காரராக இருந்தும் கொலை செய்ததாகக் கைதியாகியுள்ள ஷேக் ஷத்தார் மூளைக் கோளாறு உள்ளவரோ? ஆராய வேண்டும். மிகுந்த கண்டனத்துக்கு உரியவர் தமது ரிவால்வரை அஜாக்கிரதையாக வைத்து ஷேக் ஷத்தாருக்குக் கிடைக்கச் செய்த சந்திரகிரி போலீஸ் ஸ்டேஷன் சப் இன்ஸ்பெக்டர்.

○ ஞானாம்பிகை மோகன், கோவை

? ஆண்களோடு பெண்கள் சரிநிகர் சமானமாக வாழும் காலம் வந்தாலும் திருட்டு, கற்பழிப்பு ஆகியவை அதிகரித்து வருகின்றனவே?

! வீட்டோடு இராமல் வெளியே வருவதன் உடன் விளைவாக இது போன்ற குற்றங்களும் ஓரளவு அதிகரிக்கத்தான் செய்யும். இதற்காகப் பயந்து வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டி வைக்க முடியுமா இனியும்? அமெரிக்கப் பெண்கள் இப்போதெல்லாம் கண்ணீர்ப் புகை பீச்சி அடிக்கும் துப்பாக்கியை எடுத்துப் போகிறார்களாம் பாதுகாப்புக்கு. அல்லது ''ஸாப்

○ பல்லடம் சந்தர், ப. வடுகபாளையம்

? படித்த மனிதர்களும் சில நேரங்களில் பண்பாடு தவறி நடக்கையிலே மனத்துக்கு எப்படி இருக்கும்?

! தனியார் நிறுவனம் பதிப்பித்த தலைமைச் செயலர் திரவியத்தின் ''தேசியம் வளர்த்த தமிழ்'' என்ற புத்தகம் பிளஸ்-2 மாண வர்களுக்கு ஐந்து ரூபாய் விலையில் துணைப் பாட நூலாகியுள்ளது என்பதை அறிந்த போது மனம் மிகவும் வேதனையுறத்தான் செய்தது. மரபையும் கொள்கையையும் மீறி தலைமைச் செயலருக்குத் தனிச் சலுகை காட்டுவானேன் தமிழக அரசு?

○ என். அன்பரசு, திருச்சி-8

? இஸ்ரேலிய ஒலிம்பிக் விளையாட்டு வீரர்களையும் லண்டன் பாரிஸ் போன்ற இடங்களில் ஆயுத மற்ற இஸ்ரேலியரையும் கட்டுக் கொன்ற காட்டு மிராண்டித்தனங்களையும் கல்கி கண்டிக்காமல் இஸ் ரேலிய மந்திரிகளைக் குறை கூறுவது சரியா?

! இஸ்ரேலியர் படுகொலை செய்யப்பட்ட தருணங்களில் கல்கி அந்தக் காட்டு மிராண்டித் தனத்தைக் கண்டிக்காமல் இருந்ததே இல்லை. ஆக்கிரமிப்புக்களை முறியடிப்பதிலும் சிறையாக் செய்யப் பட்டவர்களை என்டபி விமான நிலையத்தில் மீட்பதிலும் இஸ்ரேலியர் காட்டிய வீரத்தைத் தலையங்கங்கள் எழுதி வாழ்த் தியதும் கல்கிதான். இப்போது அதே கல்கி இஸ்ரேலிய மந்திரிகளைக் குறை கூறுகிறதென்றால் நடுநிலை தவறாத தார் மீக அடிப்படையில்தான். இஸ்ரேலிய அமைச்சர்களைக் கல்கி குறை கூறு முன் இஸ்ரேலிய அரசே அமைத்த விசாரணைக் கமிஷன் குறை கூறியுள்ளதே!

○ ஐ. ஜி. மோகன், காட்பாடி

? சந்திரசேகர் பாதயாத்திரை என்ன ஆயிற்று?

! விட்டு விட்டுத் தொடர்கிறது.

○ ராகவன், சென்னை

? தமிழகத்தில் பிரதமரின் சூறாவளி சுற்றுப் பயணம் பற்றி....?

! வரவேற்கிறேன். ஆனால் எம். ஜி. ஆர். அவசரமாக வரவழைக்க வேண்டியது என். டி. ஆர். அவர்களை. அவர் நேரில் சென்னை வாசிகள் கஷ்டத்தைப் பார்த்தால் கிருஷ்ணா நதி நீர் சீக்கிரம் வரும்.

○ ஏ. ஹரிதாஸ், அச்சம்பாளையம்

? பூதாகாரமாக வளர்ந்து வரும் அகாலிகள் பிரச்னையை மத்திய அரசு அணுகி வரும் முறை பற்றி?

! அஸ்ஸாமியர் கோரிக்கைகளில் பெருமளவு நியாயம் இருக்கிறது எனில் அகாலிகள் கோரிக்கைகளிலோ பெருமளவு அநியாயம் உள்ளது. அமிர்தசரஸைப் புனித நகராக அறிவிக்க வேண்டும் என்பதில் தொடங்கி அண்டை மாநிலங்களான ராஜஸ்தான், ஹரியானா, ஹிமாசலப் பிரதேசம் ஆகிய வற்றில் உள்ள வளமான பல பகுதிகள் பஞ்சாபுடன் இணைக்கப்பட வேண்டும் என்பது வரை பலவித தீர்மானங்களை நிறைவேற்றியுள்ளனர். இதற்கு இடம் தந்தால் மற்ற மாநிலங்களுக்குப் பெரு நஷ்டம் ஏற்படும். மேலும் சண்டிகர் தமதாக வேண்டும் என்கின்றனர். இப் பிரச்னை சிக்கலானது. சண்டிகரைப் பஞ் சாபுக்கே விட்டுக் கொடுக்கஹரியானா தயா ராயிருந்தாலும்அதற்குப் பதிலாக 1970 தீர்மானத்தின்படி 114 கிராமங்கள் ஹரி யானாவுக்குக் கிடைக்க வேண்டும். ஆனால் இக்கிராமங்களில் வசிக்கும் மக்கள் இதனை விரும்புவதாகத் தெரியவில்லை. மேலும் புதிய தலைநகர் அமைத்துக் கொள்ள ஹரி யானா 200 கோடி ரூபாய் கேட்கிறது. சண்டிகாரிலேயே வசிப்பவர்களில் பெரும் பான்மையினர் இந்நகரை மத்திய அரசின் ஆட்சிக்கு உட்படுத்தி விடலாம் என்று எண்ணுகின்றனர். மத்திய அரசு சீக்கிய மதம் தொடர்பான பல கோரிக் கைகளை ஏற்பதில் தயக்கம் காட்டவில்லை. ஆனால் பிரதேச விஸ்தரிப்பு, சுயாட்சி உரிமைகள் போன்ற அம்சங்களில் எச் சரிக்கையாக இருந்து வருகிறது. இந்தப் பிரச்னையைச் சமாளிக்க மிதவாதிகளான சீக்கியர் கரங்களை மத்திய அரசு பலப் படுத்த வேண்டும். ஆனால் இங்கேயும் கட்சி அரசியல் குறுக்கிடுவதுதான் துர திர்ஷ்டம்!

○ என். மோகனசுந்தரம், பொள்ளாச்சி

? மாருதி கார் தொழிற்சாலையின் நிலைமை என்ன?

! ஜப்பானியரிடம் பொறுப்பை ஒப்படைத் தாகி விட்டதென்றால் அவர்கள் வெற்றி பெற்றே தீருவார்கள். மாருதி விஷயத் தில் நமது அரசும் பூரண ஒத்துழைப்புத் தரத்தான் செய்யும். காரணம் அனைவரும் அறிந்ததே.

○ வி. சௌரிராஜன், ஸ்ரீரங்கம்

? சர்ரியலிச கவிதைகளை ரசித்ததுண்டா?

! ஆங்கில வார்த்தைகளைப் போட்டுப் பய முறுத்தாதீர்கள்! முதல் நிபந்தனை கவிதை எனக்குப் புரிய வேண்டும். பிறகு நன்கு இருந்தால் ரசிக்கத் தடை என்ன? ஜம் பத்துக்காகப் புரிவது போல் நடிக்க எனக் குத் தெரியாது.

○ எஸ். எஸ். வாசன், தென்னலப்பாக்கம்

? தற்காலத் தமிழ் படத் தயாரிப்பாளர்கள் பணக் கண்ணோட்டத்திலிருந்தானே கலையைப் பயன்படுத்து கிறார்கள்?

! பணம் பண்ணுவதையே கலையாக்குவதை விட கலையைப் பயன்படுத்திப் பணம் பண்ணுவது எவ்வளவோ மேல்.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:

வானதி

57, ஆத்தூர் சாலை, செக்கவலனி

636 105.

# கள்வனின் காதலி

அமரர் கல்கி

### அத்தியாயம் 49

## பட்டணப் பிரவேசம்

அன்று ராயவரம் டவுனில் அல்லோல கல்லோலமாயிருந்தது. அந்தப் பட்டணத்தின் சரித்திரத்திலேயே அம்மாதிரியான காட்சிகளைக்கண்டதில்லையென்று எல்லாரும் ஒருமுகமாகச் சொன்னார்கள். இரண்டு மாதத்திற்கு முன்புதான் அந்த ஊருக்கு மாற்றலாகி வந்திருந்த சப் ஜட்ஜ் சத்தியநாத பிள்ளை கூட, ''இந்த ராயவரம் இம்மாதிரிக் காட்சிகளை என்றைக்கும் பார்த்ததில்லை'' என்று சத்தியம் செய்யத் தயாராயிருந்தார்.

அந்தப் பட்டணத்தில் வசித்த சகல ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் அன்று காலை முதல் தெரு வீதிகளிலேயே நின்றார்கள். எங்கே பார்த்தாலும் ஒரே விதமான பேச்சுதான். ''முத்தையன் பிடிபட்டு விட்டானாம்!''

''அவனை இங்கே கொண்டு வருகிறார்களாம்!''



''ஆச்சு, சுங்கான் கேட் கிட்டத் தட்ட வந்தாச்சு!'' ''உடம்பிலே 32 குண்டு பாய்ந்திருக்காம்!'' ''அறுபது போலீஸ்காரர்கள் சூழ்ந்து பிடித்தார்களாம்!'' ''அவ்வளவு பேரையும் திமிறிக் கொண்டு போகப் பார்த்தானாம்!'' ''வீரன் என்றால், அவனல்லவா வீரன்!''...



இப்படிப் பல விதமாய்ப் பேசியவர்கள் எல்லாரும் ஒரேயடியாக முத்தையனிடம் அனுதாபம் காட்டியதுதான் மிகவும் ஆச்சரியமான விஷயம். அவனிடம் இருந்த கோபம், பயம் எல்லாம் போயே போய்விட்டன. அவனுடைய துணிச்சலையும், தீரத்தையும் பற்றிய வியப்பும், அவனுக்கு நேர்ந்த கதியைப் பற்றி இரக்கமும்தான் மிஞ்சி நின்றன. உலகத்தில் ஒரு மனிதனுக்கு நேரக்கூடிய அதிர்ஷ்டங்களில் கஷ்டம் வருவதைப் போன்ற அதிர்ஷ்டம் வேறு ஒன்றுமில்லை! அப்போதல்லவா அவனைச் சூழ்ந்திருப்பவர்களின் தயாள சுபாவம் நன்கு பிரகாசிக்கின்றது? அப்போதல்லவா அவன் மற்றவர்களின் அன்புக்கும் அனுதாபத்துக்கும் பாத்திரமாகிறான்? அப்போதே யன்றோ அவனுடைய குறைகளையெல்லாம் ஜனங்கள் மறந்து அவனுடைய குணங்களை மட்டும் நினைத்துப் பாராட்டுகிறார்கள்? இதை விட ஒருவனுக்கு வரக்கூடிய அதிர்ஷ்டம் வேறென்ன இருக்கிறது?

* * *

நேரம் ஆக, ஆக வீதிகளில் நின்ற ஜனங்களின் பரபரப்பு அதிகமாயிற்று. அவர்கள் பொறுமை இழந்தார்கள். இளம் பிள்ளைகள் வீதிகளில் குட்டிக்கரணம் அடித்தார்கள். கைக் குழந்தைகளுடன் வந்து நின்ற பெண்மணிகள் அகாரணமாய்ப் பிள்ளைகளை அடித்தார்கள். வேலையைப் போட்டு விட்டு வந்த ஆண் பிள்ளைகளுக்குக் கோபம் கோபமாய் வந்தது. அந்தக் கோபமெல்லாம் போலீஸ்காரர்கள் மேல் சென்றது.

அன்று, ராயவரத்தில் இருந்த ஒவ்வொரு போலீஸ்காரரும் சிறிது மார்பைப் பார்த்துக் கொண்டுதான் நடந்தார். சென்ற 'இரண்டு வருஷமாய் மூன்று தாலுக்காக்களுக்குப் பீதியளித்து வந்த பெயர் பெற்ற திருடனைப் பிடித்து விட்டோமென்ற பெருமையை ஒவ்வொரு போலீஸ்காரரும் நன்கு ருசி பார்த்து அனுபவித்தார். அன்று அவ்வூரில் போலீஸ்காரர்கள் நடந்த நடையே ஒரு ஜோராகத்தான் இருந்தது.

இது மற்ற ஜனங்களுக்குப் பொறுக்கவில்லை. ஒரு சவடால் பேர்வழி ஒரு போலீஸ்காரரிடம் அணுகி, ''ஸார் பீடி பற்றவைக்க வேணும், ஒரு நெருப்புக்குச்சி இருந்தால் தருகிறீர்களா?'' என்று கேட்டான். போலீஸ்காரர் அவனை முறைத்துப் பார்த்தார். கூட்டத்தில் இருந்த ஒருவன், ''அடே! போலீஸ் புலி முறைக்கிறதடா!'' என்றான். ''புலியைப் பார் புலியை! ஒரு திருடனைப் பிடிக்க நாற்பது புலிகள் வேண்டி யிருந்தது!'' என்றான் இன்னொருவன். ''புலியா, பூனையா? நன்றாய்ப் பாரடா'' என்றான் மற்றொரு ஹாஸ்யப் பிரியன். ''சிகப்புத் தலைப் பாலைத் தட்டி எறியுங்கடா!'' என்றான் வேறொருவன். ''அவன் தலையிலே இரண்டு மலைப் பிஞ்சை வீசுங்கடா'' என்று இன்னொரு குரல் கேட்டது. இதே சமயத்தில் இரண்டு மலைப் பிஞ்சுகள் எங்கிருந்தோ வந்து விழுந்தன!

* * *

இந்தச் செய்தி போலீஸ் ஸ்டேஷனுக்கு எட்டவும் அங்கிருந்து போலீஸ் படைகள் அணி அணியாகக் கிளம்பிப் பட்டணத்தின் முக்கிய வீதிகளில் 'மார்ச்' பண்ணலாயின. போலீஸ் படை வரும்போது ஜனங்கள் பக்கத்து சந்துகளிலே புகுந்து கொள்வார்கள். போலீஸ் படை போனதும் உடனே

பழையபடி தெரு வீதிகளிலே வந்து கூட்டம் போடுவார்கள்.

இப்படி ரகளைப் பட்டுக் கொண்டிருக்கும்போது, முத்தையனுடைய ஊர்கோலமும் வந்து விட்டது. பூங்குளத்திலிருந்து அவனைத் தூக்கிக் கொண்டு வந்தவர்கள் ராயவரத்தை நெருங்கியபோது, இங்கிருந்து ரிஸர்வ் போலீஸ் படை போய் அவர்களுடன் சேர்ந்து கொண்டது. ஆகவே, நாற்பது ஐம்பது போலீஸ்காரர்கள் புடை சூழ முத்தையன் – இன்னும் ஸ்மரணையற்றிருந்த முத்தையன் – ராயவரத்தில் பிரவேசித்தான். இந்த ஊர்கோலம் ஸப் ஜெயிலை நெருங்க நெருங்க ஜனக் கூட்டமும் அதிகமாகி வந்தது. இதற்குள்ளே சுற்றுப்புறக் கிராமங்களிலிருந்தும் ஜனங்கள் வந்து சேர்ந்து விடவே, கூட்டம் இருபதினாயிரம் முப்பதினாயிரம் என்று ஆகி விட்டது. எல்லாரும் முத்தையனைப் பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்ட காரணத்தினால், ஜனக் கூட்டம் போலீஸாரை மேலே போக முடியாமல் நெருக்கிற்று. போலீஸார் அவர்களை அதட்டி உருட்டி விலக்க வேண்டியிருந்தது. இந்தச் சமயத்தில் மறுபடியும் எங்கிருந்தோ ஏழெட்டுக் கற்கள் வந்து விழுந்தன. இதனால் போலீஸ்காரர்கள் ஆகாயத்தை நோக்கித் துப்பாக்கிப் பிரயோகம் செய்ய வேண்டியது அவசியமாயிற்று.

அவ்வளவுதான். துப்பாக்கிச் சத்தம் கேட்டதோ, இல்லையோ, ஜனங்கள் நாலாபுறமும் சிதறி ஓடத் தொடங்கினார்கள். குழந்தைகள் வீறிட்டன. ஸ்திரீகள் அலறினார்கள். ஆனால் பத்தே நிமிஷத்தில் அவ்வளவு கூட்டமும் இருந்த இடம் தெரியாமல் போய்விட்டது.

துப்பாக்கிச் சத்தம் கேட்டபோது, முத்தையனுக்குச் சிறிது உணர்வு வந்தது. அவன் உடனே பக்கத்திலே கிடப்பதாக அவன் எண்ணிய ரிவால்வரை எடுக்கக் கையை நீட்டினான். ஆனால் கையை நீட்ட முடியவில்லை என்பதைக் கண்டான். கைகளில் ஒன்றையும் அசைக்க முடியாதபடி ஏதோ பாரத்தை வைத்து அமுக்கினாற்போல் இருந்தது. கண்ணைச் சிறிது திறந்து பார்த்தான். தன்னுடைய கைகளையும் கால்களையும் கட்டியிருப்பதாகத் தெரிந்தது. "இது என்ன ஆச்சரியம்?" என்று அவன் எண்ணமிடுவதற்குள்ளே மறுபடியும் ஸ்மரணை இழந்தான்.



பூரியிலிருந்து ஹௌரா செல்லும் எக்ஸ்பிரஸ் ரயில் அன்று நேரத்துக்குக் கிளம்பவில்லை.

காரணம்?

மத்தியப் பிரதேச கவர்னர் பகவத் தயாள் சர்மாதான்!

ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்ததும் தான் அதை எடுத்து வர மறந்து போனது அவருக்கு நினைவு வந்தது.

அன்று ரயிலைக் கால் மணி நேரம் தாமதப்படுத்தியது ஆளுனரின் வாக்கிங் ஸ்டிக்!

—சண்டே – ரமேஷ்

## அத்தியாயம் 50
## நள்ளிரவு

ராயவரம் தாலுகா கச்சேரியை அடுத்துள்ள ஸப் ஜெயிலுக்கு இரவு நேரத்தில் சாதாரணமாய் இரண்டு போலீஸ்காரர்கள்தான் பாரா கொடுப்பது வழக்கம். அவர்களேதான் தாலுகா கச்சேரி 'டிரஷரி'க்கும் காவலர்கள். ஆனால் இன்றிரவு முப்பது போலீஸ்காரர்கள் காவல் புரிந்தார்கள்.

கச்சேரியை அடுத்துக் கீழ்ப்புறத்தில் ஒரு பெரிய முற்றம் இருந்தது. அந்த முற்றத்தின் தெற்குப் பக்கமும் கீழ்ப்புறமும் 'ட' மாதிரி அமைந்த தாழ்வாரம் இருந்தது. தாழ்வாரத்தை யொட்டி, தெற்கே மூன்று அறைகளும், கிழக்கே மூன்று அறைகளும் இருந்தன. சர்க்கார் கட்டிடங்களுக்கு என்று ஏற்பட்ட ஒருவித வாசனை கமகமவென்று அங்கே வந்து கொண்டிருந்தது. அதில் தார் வாசனையும், 'பினைல்' வாசனையும் அதிகம் இருந்தனவாயினும் மற்றும் எத்தனையோ தினுசு தினுசான வாசனைகளும் கலந்து வந்து கொண்டுதான் இருந்தன.

சப் ஜெயில் கீழ்ப்புறத்து அறைகளில் ஒன்றில் முத்தையன் அடைக்கப்பட்டு இருந்தான். அவனை அங்கே கொண்டு வந்து சேர்த்ததும், சர்க்கார் ஆஸ்பத்திரியின் பெரிய டாக்டர் தமது கம்பவுண்டருடன் வந்து, அவனுடைய காயங்களையெல்லாம் நன்றாகக் கட்டிவிட்டுப் போனார். முத்தையன் எப்படியாவது பிழைக்க வேண்டும். அவன் மேல் கேஸ் நடத்தித் தண்டனைக்குள்ளாக்க வேண்டும் என்ற ஆவல் போலீஸ் மேலதிகாரிகளுக்கு ரொம்பவும் தீவிரமாக

''ஒன்பது மணிக்கு ஆரம்பிக்கற ஆபீசுக்கு எல்லோரும் கரெக்டா ஒன்பதரைக்கு வர்றாங்கன்னு ஆபீஸ் ஆரம்பிக்கிற நேரத்தையே ஒன்பதரைன்னு மாத்தினேன்.''

''நல்ல யோசனை.''

''அது கெடக்குது போங்க. இப்ப எல்லோரும் கரெக்டா பத்து மணிக்கு வர்றாங்க.''

—பாதுஷா



இருந்தது. ஆனால் டாக்டர் அவர்களுக்கு இவ்விஷயத்தில் அதிக நம்பிக்கை கொடுக்கவில்லை. ''நான் செய்யவேண்டியதைச் செய்கிறேன், பிழைத்தால் போலீஸாரின் அதிர்ஷ்டம்தான்'' என்று சொல்லிவிட்டார்.

டாக்டர் திரும்பிப் போகும் தறுவாயில், ஸர்வோத்தம சாஸ்திரி அவரை ஒரு கேள்வி கேட்டார்: ''இனிமேல் ஒரு தடவையாவது பிரக்ஞை வருமா, வரவே வராதா?'' என்று. ''ஓ! பிரக்ஞை வரும். இன்று நடுநிசி சுமாருக்கே பிரக்ஞை வந்தாலும் வரும். ஆனால் அவனிடம் யாரும் அதிகம் பேசக் கொடுக்கக் கூடாது'' என்றார் டாக்டர்.

* * *

சப் ஜெயிலில் தென்புறத்துத் தாழ்வாரத்தை யொட்டி இருந்த அறைகளில் ஒன்றில் குறவன் சொக்கன் அடைக்கப்பட்டிருந்தான். அவனுடன் பேசிக் கொண்டிருந்தார் ஸர்வோத்தம சாஸ்திரி.

அன்றிரவு சாஸ்திரி தூங்கவேயில்லை. இந்தக் கேஸில் ஆரம்ப முதல் சிரத்தை கொண்டவராதலாலும், கடைசியில் முத்தையனைப் பிடித்தவரும் அவர் ஆனதாலும், கைதிக்குப் பக்கத்திலேயே இருக்கவும், அவனுக்கு ஸ்மரணை வரும்போது அவசியமான விசாரணை செய்யவும் சாஸ்திரிக்கு அதிகாரம் கொடுக்கப் பட்டிருந்தது. முத்தையனுக்கு ஸ்மரணை வருவதற்குள்ளே, குறவன் சொக்கனிடம் சில விஷயங்களைக் கேட்க வேணும் என்று அவர் விரும்பினார்.

குறவன் சொக்கன் முன்னமேயே பிடிபட்டு விட்டானாயினும், அவனை எவ்வளவோ பாடு படுத்தியும் முத்தையனைப் பற்றி ஒரு வார்த்தை கூடச் சொல்ல மாட்டேனென்று ஒரே பிடிவாதமாயிருந்தான். இதனால் அவன் பேரில்கூட சாஸ்திரிக்கு ஒருவித மதிப்பு ஏற்பட்டிருந்தது. இப்போது முத்தையன் பிடிபட்டு விட்டபடியால், சொக்கன் தனக்குத் தெரிந்ததைச் சொல்வான் என்று நினைத்து அவனை விசாரிக்கத் தொடங்கினார். அவர் நினைத்தது சரியாய் இருந்தது. முத்தையன் படுகாயமடைந்து விட்டான் என்றும், அவன் பிழைப்பது துர்லபம் என்றும் அறிந்தபோது சொக்கன் கண்ணீர்விட்டுச் சிறுபிள்ளையைப் போல் அழுதுவிட்டான். அப்புறம் சாஸ்திரி கேட்ட கேள்விகளுக்குத் தனக்குத் தெரிந்த வரையில் பதில் சொன்னான். முதல் முதலில் திருப்பரங்கோவில் போலீஸ் லாக்-அப்பில் முத்தையன் அடைபட்ட அன்றிரவு நடந்ததெல்லாம் சொக்கனுக்குத் தவிர வேறு யாருக்கும் தெரியாதல்லவா? முத்தையனைத் தன்னுடன் தப்பித்து வரச் சொன்னபோது முதலில் அவன் மறுத்ததையும், பிறகு அவன் காவல் புரிந்த போலீஸ் சேவகனிடம் அபிராமியைப் போய்ப் பார்த்து விட்டு வர அனுமதி கேட்டதையும், அதற்கு அந்தச் சேவகன் கூறிய துர்மொழியையும், அதன் பிறகே தன்னுடைய யோசனைக்கு முத்தையன் இணங்கியதையும் சொக்கன் சொன்னபோது, சாஸ்திரிக்கே கண்ணில் ஜலம் வந்து விட்டது. ''ஐயோ! எப்படிப்பட்ட நல்ல பிள்ளை! தெருவிலும் பிறருடைய குற்றங்களினாலும் தவறுகளினாலும் அல்லவா இவன் இப்படிப்பட்ட துர்க்கதிக்காளாக நேர்ந்தது? உலகத்துக்கு இந்த உண்மை யெல்லாம் எங்கே தெரியப் போகிறது? தெரிந்தால்தான் என்ன பிரயோஜனம்? உயிரற்ற, இரக்கமற்ற சட்டம் இவனை மன்னிக்குமா?'' என்று எண்ணி எண்ணிப் பெருமூச்சு விட்டார்.

* * *

நள்ளிரவு. வழக்கம் போல் பாராச் சேவகன் டங், டங் என்று 12 மணி அடித்தான். மணி அடித்து முடிந்ததும் மறுபடியும் நிசப்தம் குடி கொண்டது.

முத்தையன் தான் எங்கேயோ அதல பாதாளத்திலிருந்து மேலே வந்து கொண்டிருப்பதாக எண்ணினான். 'ஓகோ தூங்கி யல்லவா போய் விட்டோம்?' என்று ஒரு கணம் நினைத்தான். இது

என்ன மணிச் சத்தம் கேட்கிறதே? கோவிலில் உச்சி வேளைப் பூசை நடக்கிறதாக்கும்? ஆனால் ஏன் கல்யாணி இன்னும் வரவில்லை?...'

முத்தையனுடைய கண்கள் திறந்து கொண்டன. சுற்று முற்றும் பார்த்து விழித்தான். 'ஓ! இது கொள்ளிடக் கரையில்லை; பாழடைந்த கோவிலு மில்லை.' முதல் நாள் மத்தியானம் நடந்ததெல்லாம் ஒவ்வொன்றாய் ஞாபகம் வந்தது. சரி, சரி; இது ஜெயில்!' ஆஸ்பத்திரிகளில் அவன் பார்த்திருப்பது போன்ற கட்டிலொன்றில் அவன் கிடந்தான். கால் கட்டு, கைக் கட்டையெல்லாம் அவிழ்த்தாகி விட்டது. ஆனாலும் கை கால்களை அசைக்க முடியவில்லை. அவ்வளவு பலஹீனமாயிருந்தது. கொஞ்சம் கொஞ்சமாக உடம்பெல்லாம் வலி தெரிய ஆரம்பித்தது.

சிறிது நேரத்துக்கெல்லாம் டக், டக் என்று யாரோ நடந்து வரும் சத்தம் கேட்டது. வேறு யாருமில்லை. ஸப்-இன்ஸ்பெக்டர் சாஸ்திரிதான். கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்தார். முத்தையன் எழுந்திருக்க முயன்றான்; முடியவில்லை. அம்முயற்சியினால் உடம்பில் ஏற்பட்ட வலி முகத்தில் பிரதிபலித்தது.

* * *

சாஸ்திரி அவன் அருகில் சென்று, கருணை ததும்பிய குரலில், ''முத்தையா! இனி தப்பிக்கலாம் என்ற ஆசையை யெல்லாம் விட்டுவிடு. உன் காலம் நெருங்கி விட்டது. யாருக்காவது ஏதாவது சமாசாரம் தெரிவிக்க வேண்டுமென்றால் சொல்லு. அல்லது யாரையாவது பார்க்க வேண்டு மென்றாலும் சொல்லு; முடியுமானால் அவர்களை வரவழைக்கிறேன்'' என்றார்.

முத்தையன் சற்று நேரம் யோசனையில் ஆழ்ந்திருந்தான். அந்த மனுஷர் சொன்னது வாஸ்தவம்தான். தன்னுடைய அந்திய காலம் நெருங்கி விட்டது. அதனால்தான் அவ்வளவு பலஹீனமாயிருக்கிறது போலும்!

''கல்யாணியைப் பார்க்க வேணும்'' என்று முத்தையன் முணு முணுத்தான்.

''யாரை?'' என்று சாஸ்திரி வியப்புடன் கேட்டார்.

''பூங்குளம் கல்யாணியை; திருச்சிற்றம்பலம் பிள்ளையின் மகள்'' என்றான்.

சாஸ்திரி சற்றுத் தயங்கி, ''அபிராமியைப் பார்க்க விரும்புவாயென்று நினைத்தேன்'' என்றார்.

முத்தையனுடைய முகத்திலும் கண்ணிலும் ஆர்வம் ததும்பிற்று.

''என்ன? அபிராமி என்று சொன்னீர்கள்?''

''ஆமாம்.''

''அபிராமியை உங்களுக்குத் தெரியுமா? எப்படித் தெரியும்?''

''திருப்பரங்கோயிலில் என்னுடைய வீட்டிலேதான் சில நாள் தங்கியிருந்தாள். என்னுடைய சம்சாரம்தான் அவளைப் பட்டணத்தில் பள்ளிக்கூடத்தில் கொண்டு போய்ச் சேர்த்தது.''

முத்தையன் கண்களில்தான் என்ன பிரகாசம்! என்ன மகிழ்ச்சி!

''ஐயா! இன்று என்னைப் பிடித்தது நீங்கள்தானே?'' என்றான்.

''ஆமாம் அப்பா! என்ன செய்யலாம்? சட்டம் என்று ஒன்று இருக்கிறதல்லவா?''

''நான் என்றைக்காவது பிடிபட்டால் உங்கள் கையில் பிடிபட வேண்டும் என்றுதான் எண்ணிக் கொண்டிருந்தேன். அந்தக் கீர்த்தி உங்களுக்குத்தான் வரவேண்டும் என்று ஆசைப்பட்டேன். பகவான் என்னுடைய மனோரதத்தை நிறைவேற்றினார். உங்களுக்கு நான் வேறு என்ன கைம்மாறு செய்ய முடியும்?'' என்றான் முத்தையன்.

சாஸ்திரியின் கண்களில் அன்று மறுபடியும் ஒரு தடவை கண்ணீர் துளித்தது.

''தம்பி! நீ அதிகம் பேசக் கூடாது. அபிராமிக்கு வேண்டுமானால் தந்தியடிக்கிறேன். அவள் வரும் வரை நீ உயிரோடிருந்தால் அதிர்ஷ்டம்தான்'' என்றார்.



''இதோ பார், சமைக்கத் தெரிய லேன்னு குடித்தனம் நடத்தாம இருக்க லாமா? ஆரம்பத்தில் கஷ்டமாக இருந்தாலும் போகப் போகச் சரியாகி விடும். நான் உன்னுடன் இருந்து சமைக் கக் கற்றுத் தரட்டுமா?''

—பாசக் குரலில் கேட்ட தன் தந்தையை நோக்கி ''சரிப்பா'' என்றான் மகன்!

-எஸ். விஜயா சீனிவாசன்





சென்னை பாரிமுனை பஸ் நிலையத்தில் ஒருவர் பஸ் கண்டக்டரைத் திரு வள்ளுவர் சிலைக்கு எந்த பஸ்ஸில் போக வேண்டும் என்று கேட்டார். அதற்கு கண்டக்டர் உடனே நிற்கும் திருவள்ளு வரா உட்கார்ந்திருக்கிற திருவள்ளுவரா என்று கேட்க அந்தப் பயணி அசந்து விட்டார்.

—கேட்டு ரசித்தவர். கே. சக்கரபாணி

நண்பர்: ''நீங்க நடித்து ஒரு படம் வெளிவந்ததாகச் சொன்னீங்களே, அந் தப் படம் வந்ததும் தெரியவில்லை, போனதும் தெரியவில்லையே...?''

நடிகர்: ''அதுதான் மர்மப் பட மாச்சே!''

-ஆர். சுப்பு



''சரி, அப்படியே செய்யுங்கள். ஆனால் நான் கல்யாணியைப் பார்க்க வேண்டு மென்றுதான் சொன்னேன். ஐயோ! எனக்கு ஸ்மரணை இருக்கும்போது நான் அவளைப் பார்ப்பேனா?'' என்றான் முத் தையன்.

''ஆகட்டும். அவளையும் தருவிக்கி றேன். நீ அமைதியா யிரு'' என்று சொல்லிவிட்டு சாஸ்திரி வெளியே சென் றார். பாராக்காரன் கதவைப் பூட்டி னான்.

* * *

**மு**த்தையன் மறுபடியும் கண்களை மூடிக் கொண்டான். தலையைச் சுற்று வது போல் இருந்தது. மயக்கமாக வந்தது. அந்த அரை மயக்கத்தில் அவன் காதில் பின்வரும் பேச்சு விழுந்தது:

''சங்கதி என்னவென்று தெரியாதோ உனக்கு? பூங்குளத்திலே இவனுக்கு ஆசை நாயகி ஒருத்தி இருந்தாளாம். அவன்தான் இவனைக் காட்டிக் கொடுத்து விட்டானாம். சாஸ்திரியார் அதை மறைச்சு, தானே திருடனைக் கண்டு பிடிச்சது போல் ஆர்ப்பாட்டம் பண்ணுகிறார். அந்தப் பெண் பிள்ளை மட்டும் துரோகம் பண்ணவிட்டால், இவனையாவது. பிடிக்கிறதாவது?''

''உலகத்திலேயே பொம்பிளையால் கெட்டவங்கதானே அதிகம்! தெரியா மலா பெரியவங்க 'இந்திரன் கெட்ட தும் பெண்ணாலே, சந்திரன் கெட்டதும் பெண்ணாலே!' என்றுபாடியிருக்காங்க?''

பாராச் சேவகர்கள் பேசிக்கொண்ட இந்த வார்த்தைகள் முத்தையன் காதில் விழுந்தபோது, அவனுடைய நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. அடுத்த கணம் அவன் மறுபடியும் பிரக்ஞை இழந்தான்.

(தொடரும்)

# இன்னொரு பத்மினி

## பாமா கோபாலன்

**ப**த்மினி இப்படிச் செய்வாள் என்று ஆபீசில் யாருமே எதிர்பார்க்கவில்லை. அவள் ஆப்த சிநேகிதிகள்கூட அசந்து விட்டார்கள்.

டெலிபோன் ஆபரேட்டர் ஆஷாவுக்குப் பயத்தில் உடம்பு சிறிது நடுங்கிற்று. விரல்கள் தவறான எண்களைச் சுழற்றின. டைப்பிஸ்ட் சுதாவின் விரல்கள் கீ போர்டில் பதியாமல் இடுக்குகளில் சிக்கிக் கொண்டன.

ஆஷாவையும் சுதாவையும் பார்க்கும்போதெல்லாம் ரவியின் மனத்தில் புதுக் கவிதை பூக்கும். இப்போதும் அப்படியே. 'எழுத்துக்களிடையே சிக்கியவிரல்கள்' என்றும் 'எண்கள் சுழற்றிடும் விரல்கள்' என்றும் வார்த்தைகளைக் கோத்தான்.

பத்மினியைப் பார்க்கும்போதெல்லாம் 'முரண்பாடே. உன் பெயர் பத்மினியா?' என்றே எண்ணத் தோன்றும்—

அவளா.... இப்படி.... திடீரென்று—

தன்னைச் சுற்றிலும் உள்ளவர்களின் மன நிலைகளையும், செயல்களையும், தடுமாற்றங்களையும் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல், நிதானமாகப் பென்சிலைச் சீவிக் கொண்டிருந்தாள்.

டெஸ்ட்பாட்ச் ரமணனின் கண்கள் சட்டென்று வேறு திசை நோக்க, பத்மினி தோள் பட்டையில் புடவைத் தலைப்பைச் சரிசெய்து கொண்டாள்.

அவளைப் பொறுத்தவரை அவள் செய்த முடிவு சரியே, அது ஆபீசில் என்ன பாதிப்புக்களை ஏற்படுத்துகிறதுஎன்று அவள் கவலைப்படவில்லை.

'வேலையை ராஜினாமா செய்தே தீருவது' —பத்மினியின் இந்தத் தீர்மானம், எம். டி. சந்தானத்தையே சற்று அதிர வைத்தது.

'ஏன் இப்படி இந்தப் பெண் செய்தாள்?' நேரடியாகக் கேட்கத் தயக்கம். ஆபீஸ் ரூல்ஸ்படி ஒரு மாத நோட்டீஸ் தந்துவிட்டால் சரி.

காலை மணி பத்தரை. வழக்கம்போல் காப்பி வரும் நேரம். யந்திரமாய் ஆபீஸ் பையன்கள் மேஜைமீது காப்பிகொண்டுவந்து வைத்தனர்.

பத்மினி தனக்குள் சிரித்துக் கொண்டாள். ஆஸ்பத்திரியில் டாக்டர் ராஜன் சொன்ன விஷயமும் மனத்தில் ஆழமாகப் பதிந்திருந்தது. எந்த க்ரூப் ரத்தம் என்று அட்டையில் எழுதி ஹாண்ட் பாக்கில் வைத்திருந்தாள்.

போர்ட்டிகோவில் பியட்கார் வந்து நிற்க அதிலிருந்து மிகவும் ஸ்டைலாக இறங்கினான் ராஜேஷ். வெள்ளைச் சட்டையும் பாண்டும் பளீரெனத் தாக்க, புன்முறுவலுடன் ஹாலைக் கடக்கும்பொழுதுலேசாகச் சாய்த்த தலையால் காலை வணக்கம் சொல்லிவிட்டு, அறைக் கதவைத் தள்ளி அப்பாவின் அறைக்குள் புகுந்தான் ராஜேஷ்.

பத்மினியின் இதய ஒலி சற்றே கூடி, பிறகு நிதானத்துக்கு வந்தது. அ...ப்...பா.. என்ன கம்பீரம்?

'ராஜேஷ்... நான் செய்த முடிவு மாற்ற முடியாதது.... என் வீட்டு நிலைமை அப்படி.'

—போன வாரம் கடற் கரையில் சொன்ன சொற்களை மீண்டும் நினைவுகூர்ந்தாள்.

''நோ... பப்பி.... அவசரப்படாதே.... அப்பாவிடம் சொல்லி....'' அவனை முடிக்க விடவில்லை.

''ஸாரி ராஜேஷ்... வாழ்க்கையிலே ஒரு முறைதான் இப்படி ஒரு வாய்ப்புக் கிடைக்கும்....''



''பப்பி.... என்னைப் பற்றி முழு விவரம் தெரியாமல்.....''

''எஸ். எல்லாம் எனக்குத் தெரியும். நீங்க போடற டிரஸ் மாதிரிதான் மனசும் வெள்ளை. அப்பாவுக்கு அடங்கின பிள்ளை. அம்மாமீது அபார பாசம். தங்கை நளினியின் மீது பாச மழை பொழிபவர்.....''

''பப்பி.... நீ..... என்ன சொன்னாலும் கேட்கப் போறதில்லே... ம்....''

—ஷார்ட் ஹாண்ட் நோட்டைப் பிரித்து முதல் நாள் எடுத்துக் கொண்ட டிக்டேஷன் கடிதங்களை டைப் அடித்து முடித்து விட்டோம் என்ற திருப்தியில், குறுக்காகப் பென்சிலால் கோடு கிழித்து விட்டு, அன்றையத் தேதியை எழுதத் தயாராக இருந்தாள்.

மேசை மீதிருந்த காலிக் கோப்பையை எடுத்துக் கொண்டு போனான் ஆபீஸ் பையன். ராஜேஷ் நுழைந்த எம்.—டி.யின் அறைக் கதவையே வெறித்துப் பார்த்தாள் பத்மினி. உள்ளே என்ன பேச்சு நடந்துகொண்டிருக்கும் என்று அவள் யோசிக்கலானாள்.

**''நோ** டாட்... அவள் அவசர முடிவு எடுக்க மாட்டாள். எந்த விஷயத்திலும் பதற்றம் கிடையாது. அவள் அம்மா நோயாளிதான். அப்பா கிடையாது. தங்கை ஒருத்தி ஸ்கூலில் படிக்கிறாள்.''

''ராஜேஷ்... அவள் கல்யாண விஷயம்... அது பற்றிப் பேசேன்.. உன்னை அவள் விரும்புகிறாளா?'' — எம். டி. சந்தானம்



பேப்பர் வெயிட்டை உருட்டியபடியே கேட்டார்.

''எஸ் டாட்..... அவள் என்னை மனப்பூர்வமாக விரும்புகிறாள். நானும்தான்.''

''ராஜேஷ்... அவள் உன்னை — உனக்காக விரும்பறாளா... இல்லே எம். டி. யின் பிள்ளைன்னு நினைக்க விரும்பறாளா?...'' எம்.டி. பேப்பர் வெயிட்டை இன்னொரு பேப்பர் வெயிட்டுடன் மோத விட்டார். இடித்துக் கொண்டன.

''.... நாங்க சந்தித்துப் பல நாட்கள் கழித்துத்தான் நான் உங்கள் பிள்ளைன்னு அவளுக்குத் தெரியும்....''

''ஓஹோ... தெரிஞ்ச பிறகு ரொம்ப நெருக்கம் ஏற்பட்டு இப்போ கல்யாணத்துலே வந்து முடியுதோ?''

எம். டி. யின் குரலில் சற்றே ஏளனம் இருந்தது. மகனை ஏறிட்டுப் பார்த்தார். மகனின் கண்கள் கணங்கி யிருந்தன. சற்றே

அவர் பாசத்தின் வசப்பட்டார். சுதாரித்துக் கொண்டார்.

''....அப்பா பத்மினி நீங்க நினைக்கிற மாதிரி சாதாரணப் பெண் இல்லே...''

''சரிடா.... அபூர்வப் பிறவிதான்... வேலையை ராஜிநாமாச் செய்துட்டு எம்.டி. பையனைக் கல்யாணம் செய்து கொண்டால் அதிகாரம் கைக்கு வந்துடும்னு நினைக்கிறாளா....?''

ராஜேஷ் நிமிர்ந்து உட்கார்ந்தான். என்ன மனுஷர் இவர்? இவரிடம் எல்லாவற்றையும் சொல்லிவிடலாமா?... பத்மினியின் அசாதாரண முடிவு பற்றி...

''அப்பா.... அவசரப்படாதீங்க. எல்லா விஷயத்தையும் முழுக்கச் சொல்லிடறேன். பத்மினி என்ன சொன்னு தெரியுமா?....'' என்று ஆரம்பித்தான்.

''ராஜேஷ்...என்கிட்ட எதையும் மறைக்காதீங்க... நானும் உங்களை ரொம்ப நாளா கிட்ட வட்டமாகத் தெரியும். தெரிஞ்ச பின்பும் அதிகமா நேசிக்கிறேன். உங்க மனைவின்னு உரிமையும் உறவும் வந்து விட்டால் நான் உங்களுக்கு டொனேட் செய்ய முடியுமே...''

ராஜேஷால் பேச முடியவில்லை. திணறினான். எம். டி. சந்தானம் நாற்காலியில் சாய்ந்து விட்டார்.

இப்படியொரு பெண்ணு!

''ராஜேஷ்.... ஐ ஆர் லக்கி... ஆனால் ஒரு விஷயம்... நீ என் சொந்தப் பிள்ளை இல்லேன்னு அவளுக்குத் தெரியுமா?....'' குரல் கரகரக்கக் கேட்டார் சந்தானம்.

''நோ டாட்... அது தெரியாது.... அந்த விஷயம் அவகிட்ட எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்தாது.... வேணுமானால் கூட்டிட்டுக் கேட்டு விடுவோமே....''

''நோ, வேண்டாம்....''

''இல்லேயப்பா... உங்க முன்னாலேயே



உலகில் முதன் முதலாக வேலைநிறுத்தம் கிறிஸ்து பிறப்பதற்கு முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பே நடைபெற்றது. ரோமாபுரியில் அரிஸ்டோஸ் என்ற புல்லாங்குழல் கலைஞர் கோயில் ஒன்றில் இசை நிகழ்ச்சி நடத்தினார். இடைவேளையில் அவரும், அவரின் வாத்தியக் கோஷ்டியினரும் மதிய உணவைக் கோயிலிலேயே வைத்துச் சாப்பிடத் தொடங்கினர். அதைக் கோயில் நிர்வாகிகள் தடுத்தனர். கோயிலில் கச்சேரி செய்ய வரும் கலைஞர்கள், அங்கேயே தங்கள் உணவை உண்ணும் உரிமை வழங்கப்படும் வரை வேலைநிறுத்தம் நீடித்தது. இறுதியில் இசைக் குழுவினரின் கோரிக்கை ஏற்றுக் கொள்ளப்பட்டது.

பி. நாராயணன்

அப்ளைச் பண்ணி வருகிறேன். ஜெனரல் ஆஸ்பத்திரியிலே எங்க தாரத்து உறவு டாக்டர் மூலமா நீங்க வாரத்துக்கு ரெண்டு முறை ஆஸ்பத்திரிக்கு எதுக்கு வர்றீங்கன்னு தெரியும். எப்பவுமே முழுக்கை சட்டை போடறீங்கன்னு தெரியும். வாரம் இருமுறை டயாலிஸிஸ் செய்துக்கப் போறீங்க!''

''பப்பி.... நான்.... எனக்கு.... நீ என்ன சொல்ல வர்றே?'' — தடுமாறினான்.

''ராஜேஷ் உங்களை மனப்பூர்வமா விரும்பற நான் எல்லாத்துக்கும் தயாரா இருக்கேன்.... நம்ம கல்யாணம் நடக்கணும். நானே உங்களுக்கு....'' சட்டென்று அவள் வாயைப் பொத்தினான் ராஜேஷ்.

அவன் கையை விலக்கிவிட்டுப், பத்மினி நிதானமாகச் சொன்னாள்: ''ராஜேஷ்... உங்களுக்கு உடல் நலக் குறைவு: சிறுநீரகம் சரியா ஃபங்ஷன் பண்ணலைன்னு என்றும் அவரோட பேசப் போறேன்.....''

இண்டர்காமில் அழைக்கப்பட்ட பத்மினி நோட் புக்குடன் உள்ளே நுழைந்தாள்.

''உட்காரம்மா. ராஜிநாமாக் கடிதத்தை வாபஸ் வாங்கிக்கிறயாம்மா... இந்த ஆபீஸுக்கு உன் சர்வீஸ் ரொம்பத் தேவைம்மா!''

''நோ ஸார்.... எதையுமே வாபஸ் வாங்கறதில்லே. என் சர்வீஸ் ஆபீஸுக்குத் தேவை என்கிறதைவிட, ஆபீஸ் நடத்தற உங்களுக்கு நான் அதிகமாப் பயன்படணும்னு நினைக்கிறேன்.''

''அவன் ஆபீஸ் நடத்தறதுக்கு உரிமை யில்லே என்றாலும்?....அதாவது அவன் என் ஸ்வீகாரப் புத்திரன் என்றாலும்?''

''வெரி குட். அப்படியென்றால் பூரண திருப்தி எனக்கு. இந்த ஆபீஸுக்கு இன்னொரு பத்மினி கிடைக்கலாம். ஆனால் எனக்கு ஒரே ராஜேஷ்தான்....'' பளிச்சென்று பதில் சொன்னாள் பத்மினி!

## ஆரோக்கியம், ஆனந்தம், ஒன்றுக்கொன்று ஆதாரம்!
## போர்ன்விடா பருகுங்கள்.

உங்கள் குடும்பத்தினருக்கு இன்சுவைமிக்க காட்பரிஸ் போர்ன்விடா வழங்குங்கள். கோகோ, மால்ட், பால் மற்றும் சர்க்கரையின் நற்பண்புகள் நிறைந்துள்ளது, போர்ன்விடா— உங்கள் குடும்பத்தினருக்கு அன்றுடம். இருவேளை வழங்குங்கள்.




OBM/8846 R.TAM.

காட்பரிஸ்
**போர்ன்விடா** உங்களோடு வளரும் நன்மை

# செய்திக்கதை

> 'தினமணி'யில் வந்த ஒரு செய்தி என்னை இந்தச்சிறுகதையை எழுதத் தூண்டியது. முடிவைக் கொஞ்சம் மாற்றிச் சித்திரித்திருக்கிறேன்.
>
> -சுப்பு அரங்கநாதன்

'**நா**ட்டுச் சரக்குன்னாலும் நயமான சரக்குத்தாண்டா' – குரல் வந்த திசையில் நின்று கொண்டிருந்தவனைப் படமெடுத்த நிலையில், நல்ல பாம்பு பார்க்கிற தினுசில் பார்த்தாள் கமலம்மாள்.

அவள் பார்வையின் சூடு தாங்காமல் மெதுவாகப் பதுங்கிப் பின்பக்கமாக நழுவி, கூட்டத்தோடு கலந்து போனான் அவன்.

சப்-மாஜிஸ்டிரேட் கோர்ட் வராந்தாவில், பலவகையான மனிதர்கள், வெவ்வேறுபட்ட உணர்வுகளோடு 'வாந்தி'க் கொண்டிருந்தார்கள்.

கட்சிக்காரனிடம் பணம் இறந்து பேசாமல், 'பந்தா' பண்ணுகிற வக்கீல்கள்...

இருக்கிற வரையில் இழுத்துக் கறந்துவிடத் துடிக்கும் வக்கீல் குமாஸ்தாக்கள்...

'இவர்களுக்கு ஏதாவது கொடுக்க வேண்டும்' என்கிற சம்பிரதாயம் தெரியாத அப்பாவி மனிதர்களிடம் 'கறா'கப் பேசுகிற கோர்ட் பியூன்கள்....

'விவரமில்லாமல் எக்கச் சக்கமாக வந்து மாட்டிக்கிட்டோமே... இனிமேல் ஏதாவது ஏடாகூடமாக ஆனாலும், சண்டைக்காரன் காலில் விழுந்து சமாதானமாகப் போவதானுமே தவிர, சத்தியமா இந்தக் கோர்ட் வாசலை மிதிக்கக் கூடாது' என வைராக்கியம் எடுத்துக் கொள்ளும் ஜனங்கள்...'

–இத்தனை மனிதர்களிடையே வித்தியாசமாய், எந்த விதக் கவலையுமின்றிக் கமலம்மாள் உட்கார்ந்திருந்தாள். வளமான தோட்டத்தின் விளைச்சல் போல் செழுமையான அங்கங்களும், செக்கச் சிவந்த நிறமும், அழகு ததும்பும் முகமுமாய், அவள் பார்ப்போரைக் கிறங்க அடித்துக் கொண்டிருந்தாள்.

வேலி இல்லா நிலம் ஊர் மேய்ச்சலுக்கு உள்ளாவது போல, அவளது பரிதாபப் போக்கிலும் சிதைவுண்டு ஆறு மாதங்களுக்கு மேலாகிறது.

இந்தக் காலகட்டத்தில் அவளுக்குத்தான் எத்தனை விதமான அனுபவங்கள்! எத்தனை ஆண்களை அவளது ஆன்மா தரிசித்திருக்கிறது. இரவும் பகலும் காசுக்காய் உடலை விற்று ஜீவித்ததில் எதிர்பாராமல் இந்தத் தடவை போலீஸில் சிக்கிவிட்டாள்.

• • •

**சு**வரில் பெரிய கடிகாரம்; வரிசையாக வௌவாலின் இறக்கையைப் போன்ற கறுப்புக் கவுன் அணிந்து அமர்ந்திருந்த வக்கீல்கள்; டவாலி அணிந்த சேவகர்: ஆழ்ந்த அமைதி!

நடு நாயகமாய், கனகச்சிதமாய், கம்பீரமான தோற்றத்துடன் நாற்பதுக்கும் நாற்பத்தைந்துக்கும் இடைப்பட்ட வயதில், தளதளப்புடன், கண்ணாடி அணிந்த களையான முகத்துடன், ஒரு சிம்மத்தைப் போல் மாஜிஸ்டிரேட் அவளைப் பார்த்தார்.

அவரது பார்வை, ஏற்கனவே முதல் முறையாகக் கூண்டுக்குள் நிற்கிற பதைப்புடன் நின்றிருந்த அவளைக் கொஞ்சம் மிரளச் செய்வதாயிருந்தது.

அவள் மீதுள்ள குற்றச்சாட்டு அறிவிக்கப்பட்டது. அவர் மறுபடி அவள் சந்தன முகத்தைப் பார்த்தார். அந்த ஊசிப் பார்வை அவளைக் கூசச் செய்தது.

''குற்றத்தை ஒப்புக் கொள்கிறாயா?'' – அவருடைய கணீரென்ற குரலில் தலை நிமிர்ந்தவள், பேச்சிழந்து, 'ஆம்' என்பதாகத் தலையசைத்தாள்.

சற்று நேர அமைதிக்குப் பிறகு அவர் தீர்ப்பைக் கூறினார். ''இது முதல் தடவையாக இருப்பதனால், இனி இது மாதிரி யாவை குற்றத்தைச் செய்யக் கூடாது என எச்சரித்து, செய்த குற்றத்திற்காக ஐம்பது ரூபாய் அபராதம் விதிக்கப் படுகிறது.''

மாஜிஸ்டிரேட் எழுந்து போனதும் எல்லோரையும் போல இவளும் வெளியே வந்தாள். அப்போதுதான் அவள் தன் நிலைமையை உணர்ந்தாள். 'நித்திய ஜீவிதத்திற்காக இப்படியான 'தடம் புரண்ட' வாழ்வை மேற்கொள்ள வேண்டியதாயிற்று. ஐந்தும் பத்துமான வருமானம் தினசரி செலவுக்கே சரியாகப் போன நிலையில் இப்போது அபராதத் தொகை ஐம்பதுக்கு எங்கே போக?' –என நினைத்து நின்றபோதுதான் அந்த ஆள் அருகே வந்தான்.

''கமலான்னு.... நீதானே?''

''ஆமா... என்ன விஷயம்?''

''கொஞ்சம் இப்படி வா... உங்கிட்டத் தனியாப் பேசணும்...'' – சொல்லிவிட்டு ஆளில்லாத மூலையில் போய் நின்றான். அவள் அவன் பின்னால் சென்றாள்.

''இந்தா... இதில எழுபது ரூபா இருக்கு. அபராதத் தொகையைக் கட்டிட்டு, நல்லா

**''சிங்கிள் டீ!''**

மணிமேகலை பிரசுரம் வெளியிட்டுள்ள ''பிரபலமானவர்கள் விலாசங்கள்'' என்ற நூலில் கவிஞர்கள் வரிசையில் காணப்படும் ஒரு கவிஞரின் பெயர்: ''சிங்கிள் டீ''!

—அரக்கோணம் சங்கர பாண்டியன்



# குற்றவாளிக் கூண்டிலே ஒரு திரௌபதி!

— சுப்பு. அரங்கநாதன் —



குளிச்சி முழுகி, சாயந்திரமா நம்ம லேவா லாட்ஜ்ல முப்பத்து மூணும் நம்பர் ரூமுக்கு வந்திரு... பார்ட்டி பெரிய இடம்... உனக்காக எவ்வளவு வேணுமானாலும் தரத் தயாராக இருக்காரு. இந்த மாதிரி பெரிய இடத்துப் பழக்க மெல்லாம் உனக்குப் பின்னாலே ரொம்ப உபயோகமா இருக்கும்... சந்தர்ப்பத்தைத் தவற விட்டுடாதே...." — பணத்தை அவள் கையில் திணித்து விட்டு அவன் விறுவிறுவென்று போய் விட்டான்.

• • •

கமலம்மாளுக்கு மலைப்பாக இருந்தது. குளித்த பின் கூந்தலுக்கு அகிற் புகை காட்டிக் கொண்டு நினைத்துப் பார்த்தாள். 'முகமே தெரியாத மனுஷன்... அதுவும் பெரியஇடமாம்...அட்வான்ஸாகவே எழுபது ரூபாய் கொடுத்து விட்டுப் போனான்னா...?' அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது.

மளமளவென்று புறப்படத் தயாரானாள். இருப்பதிலேயே ஒரு நல்ல வெளுத்த சேலையைக் கட்டிக் கொண்டாள். அதிக ஆரவாரமில்லாமல், அடக்கமான அலங்காரமாகச் செய்து கொண்டாள்.

ஒரிஸா மாநிலத்தைச் சேர்ந்த கோரபுட் மாவட்டத்தில் "கோரகா" என்ற பழங்குடியினர் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் பெண்களின் கற்புக்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுக்கின்றனர்.

ஒரு பெண் கற்பிழந்து விட்டாள் என்று சந்தேகிப்பார்களானால் அவள் பின்வரும் சோதனைக்கு உட்படுத்தப்படுவாள்:

ஏழு குடிசைகள் அமைத்து ஏழு குடிசைக்கும் தீவைப்பார்கள். எரிந்து கொண்டிருக்கும் ஏழு குடிசைகளுக்குள்ளும் நுழைந்து வந்தால் அவள் கற்புடையவளாகக் கருதப்பட்டு ஏற்றுக் கொண்டு அவளுக்குத் திருமணம் செய்து வைப்பார்கள்.

—'உலகத் திருமணங்கள்' என்ற நூலிலிருந்து ஏந்தல் ஆர். இளங்கோ



கமலம்மாள் லாட்ஜில் நுழைந்தபோது, அவளிடம் பணம் தந்த அந்த ஆள் நின்று கொண்டிருந்தான்.

"கரெக்டா வந்துட்டியே... ரூம்ல போய் இரு... ஏதாவது சாப்பிடறயா?"

"வேண்டாம்... சாப்பிட்டுட்டுத்தான் வர்றேன். பார்ட்டி ரெடியா?"

"கரெக்டா ஏழு மணிக்குத்தான் வருவாரு... பெரிய இடம்... இணக்கமா நடந்துக்க... போ... போய் ரூமை வெறுமனே சாத்திட்டு இரு... ம அனுப்பறேன்...."

கமலம்மாள் மாடி ஏறி, வேகமாக நடந்து குறிப்பிட்ட அறைக்குள் நுழைந்து கொண்டாள்.

• • •

சரியாக ஏழு மணி.

விளக்கு அணைந்தது. சில நொடிகளில் வெளியே இலேசான செருப்புச் சத்தம் கேட்டது. கதவு திறந்ததும்...

"யாரது?" கமலம்மாள் பதறி எழுந்தாள். டார்ச் வெளிச்சம் அவள் முகத்தில் குவிந்தது.

"ஸ்....ஸ்.... கத்தாதே..." அந்த மெதுவான குரலில் ஆக்கிரமத்தை உணர்வு தெரிந்தது.

கதவு தாழிடப்பட்டது. சில நொடிகளில் மீண்டும் விளக்கு உயிர் பெற்றது.

எல்லாம் திட்டமிட்ட ஏற்பாடு என்பது இப்போது கமலம்மாளுக்குப் புரிந்தது.

அவளுக்கு முதுகைக் காட்டிக் கொண்டு நின்ற அந்த மனிதர் திரும்பியபோது—

"எசமான் நீங்களா?" கமலம்மாள் அலறியே விட்டாள். "எசமான்... எனக்காக அபராதத்தொகையை நீங்களாகட்டினீங்க?"

அவர் நகையைத்தார். "ஆமா, கமலம், உன்னைப் பார்த்த உடனேயே எனக்குப் பிடிச்சுப் போச்சு. அதனால அபராதத் தொகைக்கு மேலேயே கொடுத்தனுப்பிச்சேன். இப்பவும் உன்னை வெறும் கையோடு திருப்பி அனுப்பப் போறதில்லே... வா, இப்படி."

"எசமான்... நாங்க உங்களைப் போல மெத்தப் படிச்சவங்க இல்லே.. வறுமையாலே தப்புப் பண்ணறோம். ஆனா அதனாலே நியாய அநியாயம் எங்களுக்குத் தெரியாமப் போயிடலே. நீங்க படிச்ச படிப்பு மட்டும் தான் உங்க பதவிக்குத் தகுதின்னு நினைக்கிறீங்க... இல்லே. உங்களோட அப்பழுக்கில்லாத நடத்தையும் தான் நீங்க வகிக்கிற நீதிபதி பதவிக்குத் தகுதின்னு என் சின்னப் புத்திக்குப் படுது..."

அவர் திடுக்கிட்டு நிமிர்ந்தார்.

"...அதனாலே நீதிபதியான நீங்க தப்பு செய்ய நினைச்சாலும் அப்படித் தப்புச் செய்ய நான் உடந்தையாக இருக்க மாட்டேன். நான் வரேன்." அவள் விடுவிடுவென்று அவரை ஒதுக்கித் தள்ளி விட்டு வெளியேறினாள்.

குற்றவாளிக் கூண்டில் நின்றால் எப்படி இருக்கும் என்பதைப் புரிந்து கொண்டவராகத் திகைத்துப் போயிருந்தார் மாஜிஸ்திரேட்!

# தலைவலி பலவகை உண்டு

# சிகிச்சை ஒன்றே ஒன்று!

# அனாஸின்

## இதில் அதிக அளவில் வலி-நிவாரணி அடங்கியுள்ளது

துரித நிவாரணம் அளிக்க, உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும், வலி-நிவாரணி மருந்து அதிக அளவில் கொண்டது—அனாஸின்.

தலைவலி, ஜலதோஷம், ஃப்ளூ, முதுகு வலி, தசை வலி, பல் வலி ஆகியவற்றிற்கு நல்ல பலனளிக்கிறது.

அனாஸின் மீது மட்டுமே நம்பிக்கை வையுங்கள்.

இப்போது பாதுகாப்பான ஃபாயில் உறையில்.






இந்தியாவின் புகழ்பெற்ற வலி-நிவாரணி மருந்து

---

* Licensed user of T.M.: Geoffrey Manners & Co.Ltd.

GM-2-83 TM

# புதுஸ்டில்கள்



நிலவென்றுதான்
உன்னை
நினைத்தேன்.
தொட்ட பிறகுதான்
தெரிந்தது
உனக்குள்
சூரியனையே
பொசுக்கிவிடும்
ஜோதி இருப்பது.

பாண்டியன் — ரேவதி
படம்: 'மண் வாசனை'



அவளைக்
கண்டவுடன்
என்
கையில் கட்டியுள்ள
கடிகாரம் கூட
நின்றுவிடுகிறது...
அதற்கும் சேர்த்துத்தான்
அடித்துக் கொள்கிறதே
இதயத்தினுள்
அலாரம்!

ராஜீவ் — சுபத்ரா
படம்: கிராமத்துக் கிளிகள்



வெண்பட்டு மேனி
குளிரில் நடுநடுங்கக்
காத்திருந்த
அழகின் பேரரசி
அனார்கலியைத்
தோழி அழைத்தாள்:
"இளவரசர் வரமாட்டார்
இனிமேல்....
பொழுது விடிந்தது
போகலாம்—"
அனார்கலி கூறினாள்:
"பொழுது விடிந்ததா?
அது எப்படி விடியும்?
என்னுடைய சூரியன்
இன்னும் வரவில்லையே."

உமா — பானுப்ரியா
படம்: தென்றல் தொடாத ம



கையே
நீயொன்றும்
கவலைப்படாதே!
நீ தட்டுவது
அவனுடைய
இதயத்தின் கதவையோ
இல்லத்தின் கதவையோ
அல்ல....
நேரம் கடந்தாலது
திறந்து கொள்ளும்
நினைவுகளின்
கதவைத்தான்.
அதனால்
கையே
நீயொன்றும்
கவலைப்படாதே!
சிவாஜி கணேசன்
படம்: மிருதங்கச் சக்கரவர்த்தி





இருளில் வழி கேட்க
எழுந்து வந்தேன்
உன்
கண்களின் வெளிச்சத்தை
நீ
காட்டிய பிறகுதான்
திசைகளே தெரியாமல்
திகைக்கிறேன்.
கமலஹாசன் – ஜீதா
படம்: 'சலங்கை ஒலி'







சந்தி யாதிரிக்
கண்கள் – என்றேன்
என்
இதயத்தின் மீதுதான்
நீட்டிப் பார்க்கப் போகிறாய்
என்பதைத்
தெரிந்துகொள்ளாமல்.
ஜெய்க்கு ஸ்மிதா
படம்: 'சிவப்பு சூரியன்'



விப்ரா
பனியன்கள்
& ஜட்டிகள்






**பெங்களூரில் நடந்த தென் மாநில முதல்வர்கள் மாநாடு முக்கியமானது தான். அதே நேரத்தில் சென்னையில் நடந்த இந்த மாநாடும் முக்கியமானது; சுவையானது, காரசாரமானது!**

இப்போ நாட்டில் பரபரப்பாகப் பேசப்படுகிற பர்சனுலடி என். டி. ஆர்.தான். அதனுல, ஷோபா, நீங்கதான் ஃபர்ஸ்ட் ஏதாவது ஒரு ஆந்திரா ஐட்டத்தை சொல்லித் தரணும்.''

''ஓகே! கோங்குரா சட்னிதானே ஆந்திராவின் பாபுலர் ஐட்டம்! அது எப்படிப் பண்ணறது தெரியுமா?''

''கோங்குரா சட்னி சாப்பிட்டிருக்கேன். ஆனு செய்யறது எப்படின்னு தெரியாதே!''

''ரொம்ப ஸிம்பிள். முதல்ல வேண்டியது கோங்குரா கீரை. வாணலியில் கொஞ்சம் எண்ணெய் விட்டுக் கீரையைப் போட்டு, நன்ருக வதக்கிக் கொள்ளணும். இதைத் தனியாக எடுத்து வைத்துவிட்டு, மீண்டும் வாணலியில் சீரகம், தனியா, மிளகாய் வற்றல் எல்லாவற்றையும் போட்டு வறுத்துக் கொள்ளணும். அப்புறம் வதக்கின கோங்குரா இலையை நன்ருக மசிய அரைச்சுக்கணும். அரைக்கும்போதே தேவையான அளவு உப்பு, போட்டுவிட வேண்டும். பிறகு உரித்த பூண்டை நசுக்கி, கடுகு சேர்த்துத் தாளித்து, மசித்த கோங்குரா இலை, வறுத்த சீரகம், தனியா எல்லாவற்றையும் போட்டு இரண்டு நிமிடம் கலந்து இறக்கி வைத்து விட வேண்டியதுதான்.'' பத்தே நிமிடத்தில் செய்துடலாம்.''

''அப்போ நாங்க வெயிட் பண்ணறோம். நீங்க அதைச் செய்திடுங்க.''

''எங்களுக்கெல்லாம் ஓவர் காரம் கூடாது'' என்று மிளகாய் வற்றல் சேர்க்கும்போது மற்ற மூவரும் எச்சரித்தனர். கோங்குரா சட்னி தயாரானது. ஆஷுக்குக் கொஞ்சம் எடுத்து வாயில் போட்டு ருசி பார்த்து ஏ-ஒன் சர்ட்டிஃபிகேட்டுக் கிடைத்தது மிஸஸ் ஷோபாவுக்கு.

**''மி**ஸ் ஜெயந்தி! அடுத்தது நீங்க என்ன சொல்லித் தரப் போறீங்க?''

''கர்நாடகாவில் பாபுலரான ஒரு ஸ்வீட். கருள் போளி.''

ஹாண்ட் பாக்கிலிருந்து கொண்டு வந்திருந்த பொருட்களை எடுத்து வைத்தார் மேஜை மீது.

மைதா — கால் கிலோ
தேங்காய் கொப்பரை — ஒரு மூடி
சர்க்கரை — ஒரு கப்
பொட்டுக் கடலை — ஒரு கப்
கசகசா, ஏலக்காய் — கொஞ்சம்

''உங்க வீட்டில் டால்டா இருக்கா?''

இருந்தது. மட மடவென்று கொப்பரையைத் துருவி, பொட்டுக் கடலை,கசகசாவைக் கலந்து நன்ருய்ப் பொடி செய்து துருவலுடன் சேர்த்து, நன்ருகக் கலந்து தனியாக வைத்துக் கொண்டார்.

''கொஞ்சம் தண்ணீர், அப்பளம் இடுகிற கட்டை, குழவி எல்லாம் வேணும்'' என்ருர்.

கொண்டுவந்ததும் மைதா மாவைப் பிசைந்து சிறு சிறு அப்பளங்களாய் இட்டுப் பொரித்து எடுத்தார்.

''கொஞ்ச நேரத்தில் கிடுகிடுவெனச் சிவக்க விடாமல் பொரித்தெடுத்து இளஞ் சூட்டிலேயே ரெடியாய் வைத்திருக்கும் துருவல் தூளை வைத்துச் சுருட்டி வைத்து விட வேண்டியதுதான். போளிகள் ரெடி.''

''இப்போவே எடுத்துத் தின்னலாமா?''

''ஆக்கப் பொறுத்தீர்கள். கொஞ்சம் ஆறட்டும். பொறுத்துக்கங்களேன்!''

**''நா**ன் கேரளாவில் பிரபலமான ''இரு புளி குழம்பு'' செய்வது எப்படின்னு சொல்லித்தரப் போறேன்.''

''சேப்பங் கிழங்கையும் துவரம் பருப்பையும் தனித் தனியே வேகவைத்து, வெந்தயத்தைப் பொன்நிறமாய் வறுத்து எடுத்துப் பொடி செய்து கொள்ளணும். தனியா, கடலைப் பருப்பு, உளுத்தம் பருப்பு, பெருங்காயம், மிளகாய் எல்லாவற்றையும் எண்ணெயில் வறுத்தெடுக்கணும். இதை, தேங்காய்த் துருவலுடன் சேர்த்து, அரைத்து எடுத்துக்கணும். புளித் தண்ணீரில் உரித்த சேப்பங்கிழங்கைக்கொதிக்க வைத்துத் தேவைக்கேற்ப உப்பு, மஞ்சள் பொடி சேர்த்துக்கொள்ள வேண்டும். இதில் வேகவைத்தது. பருப்பு கெட்டித் தயிர் இரண்டும் சேர்த்துக் கொதிக்க வைத்து, நன்ருய் நுரை வந்ததும், இறக்கி, வெந்தயப் பொடியைத் தூவி விட வேண்டியதுதான். இதில் கடுகு தாளித்து, கறிவேப்பிலை, கொத்துமல்லி போட்டு, கொஞ்சம் தேங்காய் எண்ணெய் ஊற்றி விட்டால் இரு புளி குழம்பு தயார்!''

சொன்னபடியே செய்து காட்டி, ஆஷா சமையலறையைக் கமகமக்கப் பண்ணிவிட்டார் கொஞ்ச நேரத்தில்.

# தென் மாநில மங்கையர் மாநாடு



✖ ''கோங்குரா சட்னி எப்படி இருக்கு பார்க்கலாமா?''



✖ ''சுருள் போளி எப்படிச்செய்வது?''

''**எ**ன்ன தமிழ்த் தாயே! நீங்கள் என்ன நாட்டம் சொல்லித் தருவதாய் உத்தேசம்?'' என்பது போல் மிஸ் லக்ஷ்மியை நோக்கினர் மற்ற மூவரும்.

''என்ன, இட்லி எப்படிப் பண்ணறதுன்னு சொல்லித் தரப் போறீங்க?''

''எப்படி கரெக்டா சொன்னீங்க?''

''என்ன இட்லியா? எல்லாருக்கும் தெரிஞ்சதுதானே?''

''இட்லி எல்லாருக்கும் தெரியும். ஆனு அரிசி இல்லாத இட்லிதானே நான் சொல்லித்தரப் போறேன்!''

''முதல்ல உளுத்தம் பருப்பையும் பயத்தம் பருப்பையும் தனித் தனியா சுமார் 3 மணி நேரம் ஊற வைச்சுடணும்.''

''நீங்க இனிமே ஊறவைத்து எப்போ இட்லி பண்ணித் தரப் போறீங்க?''

''கவலைப்படாதீங்க. உங்களுக்கு முன்னு லேயே நான் வந்திட்டேன் இல்லையா? அப்பவே இரண்டையும் ஊற வைச்சுட்டேன்.!''

''யூ ஹேவ் டன் எ ஒய்ஸ் திங்!''

''ஊறவைத்தவற்றை நன்ருக அரைத்து, மாவில் தேவையான அளவு உப்பு, மிளகு தான் சேர்க்கணும். இதுதான் அரிசி இல்லாத இட்லி மாவு!''

''ஆனுலும் ஒரு சங்கடம்.''

''என்னு?''

''இட்லி மாவில் உடனே இட்லி தயார் பண்ண முடியாதே!''

''ஆமாம்! என்ன பண்றது?''

''ஈவினிங் வரை எல்லாரும் இங்கேயே இருந்து, இட்லி சாப்பிட்டு விட்டுப் போங்க. ஜாலியா அரட்டை அடிப்போம்!''

''நோ....நோ...'' எல்லாரும் ஒரே குரலில்.

''ஷோபா, நீங்க, இன்னிக்கு ஈவினிங் இந்த மாவில் இட்லி செய்து எப்படி இருக்குன்னு சொல்லுங்க.''

''டோண்ட் ஒர்ரி உங்க மூணு பேர் வீட்டிலேயும் சாயந்திரம் டிபனுக்கு இட்லி சப்ளை செய்துடறேன்!''

ஏற்பாடு, தொகுப்பு: **எஸ். சந்திரமௌளி**

புகைப்படங்கள்: **ஸ்பைடர்**



✖ ''இருபுளி குழம்பு செய்ய முதல் ஸ்டெப்.''



✖ ''இட்லிக்கு மாவு ரெடி!''

என்றும் போலவே இன்றும் சாந்தி வருவாள் என்பது சுரேஷுக்குத் தெரியும்.

சுரேஷ் பாங்கில் காஷியராக வேலை பார்க்கிறான். தினமும் சாந்தி அவனிடம் நூறு ரூபாய்க்குச் சில்லறை வாங்கிச் செல்வது வழக்கமாகி விட்டது.

ஆனால் ஒரு முறையேனும் அவனிடம் பேசியது கிடையாது. இருந்தாலும் அவளைப் பார்க்க வேண்டும் என்ற ஆர்வம் அவனுக்கு இல்லாத நேரமில்லை.

இன்னும் கொஞ்ச நேரத்தில் அவள் வந்து விடுவாள். கட்டுக் கட்டாக இருந்த பணத்தை ஓர் அடுக்காகச் சீர்படுத்திவைத்துச்சில்லறைகளை எண்ணிக் கொண்டிருந்தான்.

''நூறு ரூபாய்க்குச் சேஞ்ச் கொடுங்க'' அந்த இனிமையான குரலைக் கேட்டதும் அவனால் சில்லறை எண்ண முடியவில்லை.

சில்லறையை வாங்கிக் கொண்டு அவள் வெளியே சென்று காரில் ஏறுவதைப் பார்த்ததும் அவள் பெரிய பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவள்என்பதை உணர முடிந்தது.

அதோடு தனது குடும்பத்தைப் பற்றி யோசித்த போது எட்டாத பழத்தின் மீது ஆசைப் படுவதில் பலனில்லை என்பதும் அவனால் யூகிக்க முடிந்தது.

மறுநாள்.

வழக்கம் போல் அவள் வந்தாள். சில்லறையை ஏற்கனவே எடுத்து வைத்திருந்தாலும் அதை வெளிக் காட்டாமல்அவளிடம் ஏதாவது பேச்சுக் கொடுக்க வேண்டும் என்ற முறையில் சில்லறையை மறைத்து வைத்திருந்தான்.

''நூறு ரூபாய்க்குசேஞ்ச் கொடுங்க'' என்றாள்.

'இல்லை' என்று சொல்லி விடலாமா என்று கூடத் தோன்றியது. அவள் அப்படிக் கேட்டு அவனைப் பார்த்து ஒரு புன்சிரிப்புச் சிரித்தபோது. அவனுல் 'இல்லை' என்று சொல்ல முடியவில்லை.

சில்லறையை எடுத்து அவளிடம்கொடுத்தபோது. ''ஏற்கனவே தயாரா வச்சிருக்கீங்களா?'' என்றாள்.

''வாடிக்கைக்காரங்கதானே! கூட்டமா இருக்கறச்சே வந்தாலும் எடுத்துக் கொடுக்கலாம்னுதான் முன்னாடியே தயார் பண்ணி வச்சேன்.''

''ரொம்ப தாங்க்ஸ்.''

''உங்க கிட்ட ஒரு விஷயம் பேசணும்'' என்றான்.

அவன் என்ன கேட்கப் போகிறான் என்பதை உணர்ந்த அவள். ''இன்னிக்கு நேர



# மீண்டும் வருவாள்!

மில்லே. நாளைக்குப் பேசுங்க'' என்று கூறி நடந்தான்.

அன்று மாலை சுரேஷ் வீட்டில் தகராறு.

''உன் சம்மதத்தைக் கேட்டுத்தானே பெண் பார்க்கப் போனேம். பொண்ணு வேற யாரு? நம்ம சொந்தம்தானே!''

''அதுக்கில்லேப்பா! நான் இப்பக் கல்யாணம் பண்ணிக்கிறதா ஐடியா இல்லே! இன்னும் கொஞ்ச நாள் போகட்டும்''—ஒரு வழியாக அவன் சொல்லி முடித்தான்.

''ஏற்கனவே முடிவு பண்ணினது பண்ணினதுதான். அடுத்த வாரம் நிச்சயதார்த்தம் நடக்கப் போகுது. நீ சும்மா தோணின மாதிரி சொல்றதிலே அர்த்தமில்லே. எனக்குத் தெரியும். எது எப்ப செய்யணும்னு'' என்று அவர் கூறி முடித்தார்.

சுரேஷ் குழப்பத்தில் ஆழ்ந்தான்.



நாளை சாந்தியிடம் இந்த விஷயத்தைக் கூறிவிட வேண்டும் என்று நினைத்தான்.

மறு நாள்.

அவள் வந்தாள். மாலை பீச்சுக்கு வருமாறு அவளிடம் சொன்னான்.

எந்த வித மறுப்பும் தெரிவிக்காமல் சொன்ன நேரத்துக்கு அவள் வந்தாள்.

"சாந்தி! எனக்கென்னவோ என் மனசுல உன்னைத்தான் நினைச்சிருக்கேன். ஆனா எங்க வீட்டில..." என்று சொல்லி முடித்தான்.

அவன் சொன்னதைக் கேட்டதும் அவள் "மிஸ்டர் சுரேஷ், உங்க வீட்டில சொல்றபடியே நீங்க கல்யாணம் செய்துக்குங்க. அதுதான் நல்லது!" என்றாள்.

"அப்பா! நான் இவ்வளவு நாளா உன்னையே நினைச்சுக்கிட்டு இருந்தது. உன்னை [illegible] மனசாரக் காதலிச்சது?"

"இத பாருங்க, நீங்க நெனைக்கிற மாதிரி நான் ஒண்ணும் பெரிய இடமில்லே! அத்தோட நானு ஒரு எக்ஸ்ட்ரா நடிகை!"

"அப்படின்னா நீங்க தினமும் நூறு ரூபாய்க்குச் சில்லறை வாங்கிட்டுப் போறது?"

"அது என்னோட பந்தாவைக் காட்டுறதுக்கு! நான் ஒண்ணும் இல்லாதவள்—வசதி இல்லாதவள்னு இந்தச் சினிமா உலகத்துக்குத் தெரிஞ்சா என்னை ரொம்ப சீப்பா நினைச்சுப்பாங்க! அதோடு என் மானத்தையும் ஏலம் பேசுவாங்க! அதனாலதான் நான் ஒண்ணும் உங்களுக்கு இளைச்சவள் இல்லேன்னு காட்டிக்கத்தான் — என்னை அழைச்சுக்கிட்டுப் போற அம்பாஸிடரை உங்க பாங்கி முன்னாடி நிறுத்தித் தினமும் பாங்கில வந்து சேஞ்ச் வாங்கிட்டுப் போறேன்!"

"அப்படியா? அப்ப அந்த சேஞ்ச் தினமும்...."

"அதுவா! எங்க வீட்டுக்குப் பக்கத்திலிருக்கிற நாடார் கடைல அந்தச் சில்லறையைக் கொடுத்தால் ரொம்ப சந்தோஷப்படுவார். சில்லறையை வாங்கி அவர் நூறு ரூபாய் நோட்டை என்னிடம் தருவார். அதை வாங்கி மறு நாள் உங்க பாங்கில சேஞ்ச் வாங்க வருவேன்."

அவன் இதைக் கேட்டதும் எதுவும் பேசாமல் உட்கார்ந்திருந்தான்.

"மிஸ்டர் சுரேஷ், எனக்கு நேரம் ஆயிடிச்சு. நாளைக்கு நூறு ரூபாயோடு பாங்கில மீட் பண்றேன்" என்று சொல்லிக் கொண்டு அவள் நடந்தாள்.

அவள் செல்வதைப் பார்த்துக் கொண்டு வாயடைத்தவனாக நின்றிருந்தான் சுரேஷ்!



# ஒரு சங்கமத்தைத் தேடி... வாஸந்தி

## 11

அத்தை கட்டாயப்படுத்திப் போட்ட சாப்பாட்டையும் வாயில் இனித்த சர்க்கரையையும் அவன் உள் பிரக்ஞை அறியாமல் ஏற்றுக் கொண்டான். மனசு பல திசைகளில் சிறகடித்தது. உணர்ச்சிகளின் விளிம்பில் நின்றது. ஒரு நெடிய யாத்திரையை முடித்த ஆயாசத் திருப்தியும், எதிர்கொண்டு நிற்கும் புதிய கனவுப் பிரதேசங்கள் ஒரு திகைப்பையும் ஏற்படுத்தின. சட்டைப் பையில் அமர்ந்திருந்த தந்தியின் வாக்கியங்கள் ஓர் இனிய லாகிரியை எழுப்பின.

அவன் சாப்பிட்டு முடித்துத் திண்ணைக்குச் சென்று உட்கார்ந்து மறுபடி தந்தியைப் பிரித்துப் பார்த்தான்.

''ஃபஸ்ட் கிளாஸில் பாஸ் செய்திருக்கிறாய். வாழ்த்துக்கள். சீக்கிரம் டில்லிக்குத் திரும்பு. அன்பு. — தாரா.''

அவளுக்கெப்படி என் நம்பரும் இந்த விலாசமும் தெரிந்தன? இத்தனை அக்கறையுடன் வேலை மெனக்கெட்டு எதற்குத் தெரிவிக்கிறாள்? இதுவும் அவளுடைய விளையாட்டுக்களில் ஒன்றாய் இருக்குமோ? இந்த மாதிரி ஒரு விஷயத்தில் விளையாடுவாளா?

''லவ். - தாரா.''

அவனுக்குக் கூச்சத்தில் முகம் சிவந்தது. ஜிவ்வென்று மனசுக்கு இறக்கை முளைத்து விட்டாற்போல் உயரப் பறந்தது. கற்பனை தேசங்களை ஊடுருவிக் கொண்டு சென்றது.

''உன்னை எனக்குப் பிடிக்கிறது யார்!''

அவளுடைய வார்த்தைகளுக்கு ஏதேனும் அர்த்தமிருக்குமா? அர்த்தமில்லாவிட்டால் இந்தத் தந்தியை அனுப்புவாளா?

இது நம்ப முடியாத கதையாக இருந்தது. அதன் அபத்தத்தில் அவன் திக்குமுக்காடிப் போறான்.

''என்ன தனக்குத் தானே சிரிச்சுக்கிறே?''

அவன் சட்டென்று சுயநினைவு வந்து எதிரே நின்றிருந்த நாச்சாமியைப் பார்த்து இயல்பாகச் சிரித்து.

''ஒண்ணுமில்லே, வா, உட்கார்!'' என்றான்.

நாச்சாமி தயங்கிக் கொண்டே மடித்துக் கட்டியிருந்த வேஷ்டியைத் தளர்த்தி விட்டுத் திண்ணையில் அமர்ந்தான்.

தூரத்திலிருந்து பார்க்கும்போது அவனுடைய உருவம் தோற்றுவிக்கும் 'ஹீரோ'த் தனமும், தன்னம்பிக்கையும் மதர்ப்பும் ஓரடித் தொலைவில் பார்க்கும்போது வீர்யம் எல்லாம் போன மாதிரி ஓர் ஏமாற்றம் அளித்தது. நல்ல சிவப்பான கட்டுமஸ்தான உடம்பில் அந்தச் சஞ்சலக் கண்களையும் அருளில்லாத பார்வையையும் காணும்போது 'இது வெறும் சதைப் பிண்டம்' என்ற ஒரு அசுவாரஸ்யத்தை ஏற்படுத்தியது.

''என்ன சமாச்சாரம் நாச்சாமி?''

''ஒண்ணுமில்லே. உன் ரிஸல்ட் எப்ப வரும்னு கேட்க வந்தேன்!''

''வந்தாச்சு. இன்னிக்குத்தான் தந்தி வந்தது. ஃபஸ்ட் கிளாஸ்லே பாஸ் பண்ணிட்டேன்!''

நாச்சாமி வெற்றிலைச் சிவப்பேறியிருந்த தன் வரிசைப் பற்களைக் காட்டிச் சிரித்தான்.

துடையை அமர்க்களமாகத் தட்டி, ''சபாஷ்!'' என்றான். ''இந்த ஊர் முதல் இன்ஜினியர் நீதான்! தேவலே, உருப்படியா ஒரு காரியம் பண்ணிட்டே!''

''நீ ஏன் மேற்கொண்டு படிக்கல்லே நாச்சாமி?''

''அஹ்!'' என்று நாச்சாமி அலட்சியமாகச் சிரித்தான். ''எனக்கு அதுக்கெல்லாம் பொறுமை இல்லே. நிலத்தைப் பார்த்துக்க என் படிப்புப் போறும். உட்கார்ந்து சாப்பிடுரப்படியா நல்ல வேளை நில புலன்கள் இருக்கு. அநாவசியமா உடம்பையும் மூளையையும் வருத்திப்பானேன்?''

கார்த்திக் பதில் ஏதும் சொல்லாமல் தெருவில் பார்வையைப் பதித்தான்.

''இனிமே உத்தியோக வேட்டையா?.. இல்லே, இன்னும் மேலே படிக்கப்போறியா?''

''வேலை தேடப் போறேன்!''

''அப்ப டில்லிக்குக் கிளம்பிடுவே!''

''ஆமாம்!''

சட்டென்று அவர்கள் பேச்சு நின்றது. எதிர்த்த வீட்டு எச்சுமி விருவிருவென்று தெருவைக் கடந்து வந்து திண்ணை ஏறி அவனைப் பார்த்து லேசாகச் சிரித்தாள்.

''அத்தை இருக்காரா?'' என்றாள்.

பளீரென்ற அந்த முகத்தையும் கோவில் சிற்பமாய் நின்ற உடம்பையும் அவன் ஒரு திகைப்புடன் பார்த்துத் தன்னைச் சமாளித்துக் கொண்டு,

''இருக்காளே!'' என்றான்.

அவள் கையில் ஒரு சம்புடம் இருந்தது. நாச்சாமியையும் பார்த்து ஒரு புன்னகை வீசிவிட்டு உள்ளே சென்றாள்.

நாச்சாமியின் முகம் சிவந்து போயிருந்தது. பார்வை தாழ்ந்திருந்தது. எதையோ

ஜெயிக்கப் புறப்பட்டவள் மாதிரி அவள் இருக்க, இவன் ஏன் சங்கடப் படுகிறான் என்று நினைத்துக் கார்த்திக்குக்குச் சிரிப்பு வந்தது.

நாச்சாமி எழுந்தான்.

''எப்பக் கிளம்பறே?''

''தெரியல்லே. டிக்கட் கிடைக்கணும்!''

''இன்னிக்கே போய்ப் பாரு. டிக்கெட் கிடைக்கிறதுதான் கஷ்டம்!''

வீட்டுக்குள் ஒரு நோட்டம் விட்டுவிட்டு நாச்சாமி கிளம்பினான்.

ரிஸல்ட்டைப் பற்றித் தெரிந்து கொள்வதை விட அவன் எப்பொழுது கிளம்புகிறான் என்று தெரிந்துகொள்ளத்தான் இவன் வந்திருக்கிறான் என்று திடீரென்று புரிந்த



# அதற்கு விலையேதும் இல்லை
# அசலான அமிர்தமாம் அது—பாப்பாவுக்கு
# பசித்ததும் புசித்திடக் கிடைக்கிறது.

எண்ணிப் பாருங்கள்—வெண்மை அதிசயமாம் தாய்ப்பால் இயற்கையின் ஒரு வரப்பிரசாதம்.

புதிதாகப் பிறந்த குழந்தை முறையாக ஊட்டம் பெறுவதற்கான உடல் வளர்ச்சிச் சத்துக்கள் (புரதம்), சக்திதரும் சத்துக்கள் (கார்போஹைட்ரேட்டுகள், கொழுப்பு), உடல் பாதுகாப்புச் சத்துக்கள் (வைட்டமின்கள்) ஆகியவை சரிவிகிதமாய்க் கலந்துள்ளன தாய்ப்பாலிலே.

## உடல் ஆரோக்கிய உத்தரவாதம்

உங்கள் குழந்தை, உங்கள் முலையிலிருந்து நேரடியாகப் பால் குடிப்பதால் தூய்மைக்கேடு பிரச்சினைக்கே இடமில்லை.

அத்துடன், உங்கள் குழந்தை பால் வேண்டும் போதெல்லாம் அது சரியான வெப்ப நிலையில் அதற்கு கிடைக்கிறது.

தாய்ப்பாலில் 'நோய் எதிர்ப்புப் பொருள்' நிறைந்துள்ளது. அது வயிற்றில் வாயுக் கோளாறுகள் மற்றும் இதர நோய்களைத் தடுக்கிறது. அத்துடன் அதில் புளிப்பு—எதிர்ப்பு வைட்டமின் சி போன்ற இதர நல்மான பொருட்களும் உள்ளன.

## பாதுகாப்பு மற்றும் தன்னம்பிக்கை

முலைப்பால் குடிக்கும் குழந்தை அதிக பாதுகாப்பு மற்றும் தன்னம்பிக்கை பெறுகிறது. காரணம், பசியைத் தணித்திட குழந்தை முலைப்பாலை உறிஞ்சும் போது நீங்கள் குழந்தையை அரவணைத்து பாசத்தையும் சேர்த்தல்லவா பாலூட்டுகிறீர்கள்.

## உலகளாவிப் பிரபலமடைகிறது

அதன் ஊட்டச்சத்து மற்றும் இதர நலன்கள் விரிவாகவும் அதிகமாகவும் உணரப்படுவதால் மேலை நாடுகளிலும் கூட முலைப்பால் கொடுத்தல் மிகவும் அதிகமாக பிரபலமாகி வருகிறது.

உங்கள் உடல் நல பாதிப்பு அல்லது பால் பற்றாக்குறை ஆகியவற்றால் நீங்கள் குழந்தைக்கு பால் கொடுக்க முடியாமல் போனால் என்ன செய்வது?

உங்கள் குழந்தைக்கு நீங்கள் சிறந்த 'தாய்ப்பால் மாற்று' தேர்ந்தெடுக்க வேண்டும்.

## ஸ்ப்ரே ட்ரை செய்யப்பட்ட அமுல் ஸ்ப்ரே

அமுல் ஸ்ப்ரே-நன்கு சமச்சீராக கலக்கப்பட்ட சத்துக்களுடன் கூடியது—பிரதம தரமுள்ள புரதம், ஜீரணிக்க எளிதான கொழுப்பு மற்றும் கார்போஹைட்ரேட்டுகள், சரியாகக் கலந்துள்ள வைட்டமின்கள் மற்றும் தாதுக்கள்.

ஏற்கனவே கொதிக்க வைத்த வெதுவெதுப்பான நீரில் அதைக் கலப்பது எளிது, முன்னாலேயே அதை பசை போல் தயாரிக்க வேண்டிய அவசியம் இல்லை.







**சிக்கனமானது**

டின்னில் அடைக்கப்பட்டுள்ள குழந்தை உணவுகளில் மிகவும் சிக்கனமானது, அமுல் ஸ்ப்ரே. காரணம், அது இந்தியாவின் 'வெண்மைப் புரட்சிக்கு' முன்னோடியான நவீன பால் நிறுவனத்தால் தயாரிக்கப்பட்டுள்ளது.

ஆனால் கொதிக்க வைத்த நீர் சுகாதார முறையில் கிருமி நீக்கம் செய்யப்பட்ட பாத்திரங்கள் மற்றும் பால் புட்டிகள் உபயோகித்தலை உறுதி செய்து கொள்ளுங்கள். பால கலக்கப்படும்போது அதிகம் நீராகி விடுவதைத் தவிர்ப்பதற்கும், போதுமான ஊட்டச் சத்துக்களை உறுதி செய்வதற்கும் டின் மீது குறிப்பிட்டுள்ள வழி முறைகளை கவனமாக பின்பற்றுக.

உங்கள் குழந்தையின் ஆரோக்கிய ஆர்வத்தில் ஒரு நற்செய்தி வழங்குகின்றனர்
அமுல் ஸ்ப்ரே தயாரிப்பாளர்கள்.

# அமுல்ஸ்ப்ரே

இந்தியாவின் முன்னணி பால் நிறுவனத்தின் தயாரிப்பு.

**இலவசம்! அமுல் வளர்ப்பு வழி—**

[illegible]
இந்தி, மராத்தி, குஜராத்தி, தமிழ், தெலுங்கு, மற்றும் மலையாள மொழிகளில்.

[illegible]
பம்பாய் 400 001.



குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க்
மார்க்கெட்டிங் ஃபெடரேஷன்
லிமிடெட், தபால் பெட்டி எண். 10,
ஆனந்த் 388 001 குஜராத் மாநிலம்.



ASP/AS-3/83

போது கார்த்திக்குக்குச் சிரிப்பு வந்தது. வேலையற்றவனின் அற்பப் பயங்கள்! வேஷ்டியை மடித்து முழங்காலுக்கு மேலாகக் கட்டிக் கொண்டு ஏதோ ஒரு கொச்சையான தமிழ் சினிமாப் பாட்டைப் பலக்கப் பாடிக் கொண்டு போகும் அவனைப் பார்க்கப் பரிதாபம் ஏற்பட்டது. இவனைப் பற்றித் தாரா என்ன நினைப்பாள் என்று திடீரென்று தோன்றிற்று.

''உன்னைச் சுற்றிப் பார். நம்ம தேசத்தில் மூணு பேரில் ஒருத்தன் பட்டினி!''

இந்த 'நார்ஸிஸ'ப் போதையில் இருப்பவனை அந்த மார்க்ஸிஸவாதி பார்த்தால் என்ன சொல்வான்?




''கிரிக்கெட் மூலம் நீங்கள் பெரிய பணக்காரர் ஆகிவிட்டீர்களா?'' என்று கேட்டால் சிரித்துக் கொண்டே மறுத்து விடுகிறார் கிரிக்கெட் ஆட்டக்காரர் கபில்தேவ்! இப்போது அவர் சண்டிகர் நகரில் ஒரு பெரிய ஹோட்டல் கட்டிக் கொண்டிருக்கிறார். அதில் முப்பது ஏ. ஸி. ரூம்கள் இருக்கும். ஹோட்டலுக்குப் பெயர் 'கபில்தேவ்.' அதிலுள்ள ரெஸ்டாரண்டுக்கு 'விக்கெட்' என்று பெயர் வைக்கப் போகிறாராம்!

சொசைட்டியிலிருந்து
-அனிதாராமச்சந்திரன்

''கட்டுக் கொல்லணும் 'யார்'!''

அவளைப்பற்றி நினைக்க நினைக்கப் பிறிட்டுக் கொண்டு ஒரு அபிமானம் கிளம்பிற்று. இடையில் இருந்த வேலிகளை யெல்லாம் உடைத்தெறிந்து கொண்டு பாய்ந்து. அந்த இரண்டு வார்த்தைகளைத் தாவி அணைத்தது.

''லவ்! தாரா!''

''ரொம்ப நல்ல சமாசாரம் சொன்னார் அத்தை!''

அவன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான்.

எச்சுமி. பின்னால் நிலைப்படியில் நின்றபடி அத்தை.

அவன் கூச்சத்துடன் திண்ணையை விட்டு இறங்கி நின்றான்.

எச்சுமியின் குரலிலும் பார்வையிலும் ஒரு மிகையான ஆர்வம் தெரிந்தது.

''முதல் வகுப்பிலே பாஸ் பண்ணிட்டேளாமே?''

அவன் அசடு வழிய நின்றான்.

அவன் பதில் சொல்லிவிட்ட பாவனையில், ''ரொம்ப சந்தோஷம்'' என்றாள் அவள் தொடர்ந்து. ''நான் சரியான சமயத்துக்கு ஸ்வீட் கொண்டு வந்தேன். ஊருக்குக் கிளம்பிடுவேன். ஞாபகம் வச்சுக்குங்கோ. வரேன் அத்தை!''

விடுவிடுவென்று பேசிவிட்டு அதில் மிகவும் திருப்தி அடைந்தவள் போல் ஒரு பிரஸன்னத்துடன் தன் வீட்டை நோக்கி அவள் செல்வதை அவன் ஒரு திகைப்புடன் பார்க்கையில்,

''உள்ளே வாடா!'' என்று அத்தை ஒரு அதட்டல் போட்டதும் அவனுக்குச் சிரிப்புப் பொத்துக் கொண்டு வந்தது.

அவன் உள்ளே நுழைந்தபடியே சிரித்துக் கொண்டு சொன்னான்:

''இவாளை யெல்லாம் நீங்க மனோதத்துவ ரீதியிலே பார்க்கணும் அத்தை! இதுக்கெல்லாம் தனியா வைத்திய சாஸ்திரமே இருக்கு!''

நடு முற்றத்தின் குறட்டில் உட்கார்ந்து அத்தை ஆகாயத்தைப் பார்த்தாள்.

''எனக்கு அதெல்லாம் புரியாது.'' என்றாள். பிறகு தனக்குத்தானே முணுமுணுத்துக் கொள்கிறவளைப் போலச் சொல்லிக்கொண்டாள். ''இமிர் பிடிச்ச குதிரையாட்டம் தான் மனசும் உடம்பும் இப்பத் துள்ளும். அதை அடக்கறதுக்கு வெளி வைத்தியத்துக்குப் போகணுமா என்ன? நாமேதான் வைத்தியம் பார்க்கணும்.''

அவன் சிரித்தான்.

''அவளே வைத்தியம் பார்த்துக்கறாளே. ஆனா நீங்க நினைக்கிற தினுசுலே இல்லே. அத்தே. இப்ப நமக்கு இதைப் பத்தியெல்லாம் யோசிக்க நேரமில்லே! உடனடியாப் போய் டிக்கட் வாங்கணும் டில்லிக்கு.''

''கிளம்பலாம். எனக்கும் ரொம்ப நாள் இங்கே இருக்க முடியறதில்லே!''

அத்தையின் குரலிலிருந்த அலுப்பும், கசப்பும் லேசான ஆச்சரியத்தை எழுப்பிற்று. இந்த ஊரும் ஜனங்களும் இந்த வீடும் அவளுள் பழைய ஞாபகங்களையும் அவளுடைய இழப்பைப் பற்றின நினைவையும் கிளப்பி விட்டிருக்க வேண்டும் என்று தோன்றிற்று. தனிமை உணர்வை ஏற்படுத்தி யிருக்க வேண்டும்.... இவளுடைய புலனடக்கம் — இவள் வாழ்ந்த சமூகம் விதித்திருந்த வரம்புகளினால் விளைந்த இயல்பான சாதனை... இவளுள் ஏமாற்றங்கள் இல்லாமல் இருக்காது...

ரயிலேறி உட்கார்ந்ததுமே விசாலத்தின் முகம் தெளிந்து விட்டது. கிராமத்தையும் அதன் ஜனங்களையும் பலவந்தமாக மனசிலிருந்து அகற்றப் பார்ப்பவள் போல் நடந்து கொண்டாள். தமிழ் நாட்டு எல்லையைக்

**ஒளியின் வாயிலாகத் தொலைபேசித் தொடர்பு**



ஜெர்மனியில் பெரிய நகரங்களில் ஒளியலைகளைப் பயன்படுத்தி (Light wave) தொலைபேசித் தொடர்புகளை ஏற்படுத்தியுள்ளனர். தற்போது தேவை அதிகமாக உள்ளதால் பவேரிய மலைப் பகுதியில் உள்ள குடிசைப் பகுதிகளுக்கு இத்தகைய இணைப்பினை ஏற்படுத்தியுள்ளனர். சாதாரணத் தொலைபேசிகளைப் போலல்லாமல் இவ்வகை தொலைபேசிகள் மோசமான வானிலையால் பாதிக்கப்படுவதில்லை.

ஆதாரம்: கலைக்கதிர்
கே. சங்கர்.

கடந்ததும், டில்லியும், தாராவும் எதிர்காலமும் அவன் சிந்தையை ஆட்கொண்டன.

டில்லியில் வீடு வழக்கமான ஆசார அனுஷ்டான நிதானத்தில் இருந்தது. அந்த வம்சத்தில் ஏற்பட்டுப்போன மாறுதலை, குலத்தொழிலிலிருந்து நிதர்சனமாக அவன் விலகிவிட்ட புரட்சியைப் பற்றிய பிரக்ஞை இல்லாத அஸமஞ்சத்தனத்தில் இருந்தது. அப்பாவும் கணேசனும் கோவிலுக்குப் போயிருந்தார்கள். அம்மாவும் கோமதியும் அவனையும் விசாலத்தையும் கண்டவுடன் எளிய சந்தோஷத்துடன் வரவேற்றார்கள்.

அம்மாவுக்கு ஞாபகப்படுத்துகிறாற் போல ''என்ன மன்னி, பிள்ளை இன்ஜினியர் ஆயிட்டானா?'' என்றாள் அத்தை.

அம்மா காப்பிக்குச் சர்க்கரையை அளந்து போடுவதில் மும்முரமாக இருந்தாள்.

''பாஸ் பண்ணிட்டான்னு கணேசன் சொன்னான். நான் என்னத்தைக் கண்டேன்?''

பன்னிரண்டாம் கிளாசுக்கும் இன்ஜினியரிங் பரீட்சைக்கும் அம்மாவுக்கு வித்தியாசம் தெரியாது என்கிற ஏமாற்றத்துடன் அவன் குளிக்கச் சென்றான். பாய்லர் புகைபட்டுக் குளியலறையின் சுவர்களும் உத்தரமும் கருப்பாகிப் போனதில் காலை நேரத்திலும் லைட் எரிய வேண்டியிருந்தது. புகை படிந்த இருபத்தி ஐந்து வாட் பல்ப் அழுது வடிந்து காட்டிய வெளிச்சத்தில் அசம்பாவிதமாக ஃபியட் காரும் ஸ்டியரிங்கைப் பிடித்திருந்த தந்தக் கையும் மோகனச் சிரிப்பும் ஞாபகத்துக்கு வந்தன.

'ஐ லைக் யூ 'யார்'!' என்ற வார்த்தைகள் செவியில் ஒலித்தன. அதை ஒரு அகரத்தனத்தோடு, பலத்த குரலில்,

''மூஷிக வாகன, மோதக ஹஸ்தா!'' என்று பாடி விரட்டினான். குளித்து வெளியில் வரும்போது கணேசன் உட்கார்ந்திருந்தான், அதரங்களில் வழக்கமான புன்சிரிப்போடு.

''என்ன பாட்டெல்லாம் அமர்க்களப்படுகிறது? பரீட்சை பாஸ்பண்ணிட்டதென்பா?''

கணேசன் தோழமையோடு அவன் தோளை அணைத்தபோது இத்தனை நேரம் மனசைக் கப்பியிருந்த ஏமாற்றம் லேசாகி நெகிழ்ச்சி ஏற்பட்டது. கணேசனின் பார்வையில் பாசமா, கனிவா, பெருமிதமா என்று புரியாத ஒரு கலப்படம் தெரிந்தது.

''ஊர்லேந்து வந்தாச்சா?'' என்று அர்த்தமற்ற ஒரு பொதுவான கேள்வியைக் கேட்டுவிட்டு அப்பா எங்கோ புறப்படச் சித்தமானவர் போல் காணப்பட்டார்.

கணேசன் அணைத்த கையை எடுக்காமல் நின்றான்.

''எனக்கு ரொம்ப சந்தோஷம் கார்த்திக்'' என்றான் மிருதுவாக. ''நான் செய்ய முடியாததை நீயாவது செய்தாயே'' என்றாற் போல் கார்த்திக்குக்குப் பிரமை ஏற்பட்டது. மனசு லேசாகக் குலுங்கிற்று. கணேசனின் பார்வையும் சிரிப்பும் வழக்கம் போல் இருந்தன.

''தாங்க்ஸ் அண்ணா!'' என்று அவன் கூச்சத்துடன் முணு முணுக்கும்போதும் அப்பாவின் விட்டேற்றித்தனம் மிக மெலிதாக உறுத்திற்று.

கணேசன் கையை விடுவித்து, ''சாப்பிட வா'' என்றான் கனிவுடன்.

அவர்கள் சாப்பிடும்போது அப்பா எங்கோ கிளம்புகிற அவசரத்தில் குரல் கொடுத்தார்.

''காமு! நான் சித்த சாம்பமூர்த்தி வீடு வரை போயிட்டு வரேன். நேத்திக்கு வந்த ஜாதகத்தைப் பத்தி அவனோட அபிப்பிராயமும் கேட்டுக்கிறேன்!''

அப்பா கிளம்பிப் போனதும் விசாலம் கேட்டாள்.

''யாருக்கு ஜாதகம் மன்னி?''

''பழனிலேந்து ஒரு ஜாதகம் வந்தது, கார்த்திக்குக்காக. சாமா சாஸ்திரிகள் ஞாபகம் இருக்கா? அவரோட பேத்தி!''

தூக்கி வாரிப் போட்டுக் கார்த்திக் நிமிர்ந்து பார்த்தான். கருகருவென்று ஒரு ஆக்ரோஷம் கிளம்பிற்று.

''பைத்தியம் பிடிக்கப் போச்சா உங்களுக்கெல்லாம்? இப்பத்தான் ரிசல்ட் வந்திருக்கு. இனிமே வேலை தேடியாகணும். அதுக்குள்ளே கல்யாணப் பேச்சை ஆரம்பிச்சுட்டேளா?''

அம்மா வெகுளித்தனமாகச் சிரித்தாள்.

''வேலைக்கென்னடா, தன்னாலே கிடைச்சுட்டுப் போறது. மத்த கவலையெல்லாம்

# அருள் வாக்கு...



ஒரு திருஷ்டாந்தம் சொல்வதுண்டு. ஒரு காடு இருந்ததாம். அதன் பக்கத்தில் பெரிய நதி. ஒரு சின்னக்குட்டை இரண்டும் இருந்தனவாம். காட்டிலே தீப் பிடித்துக் கொண்டதாம். அப்போது பலமான காற்று சேர்ந்து கொள்ளவே எரிகிற சருகுகள், விறகுத் துண்டுகள், மண் எல்லாம் அடித்துக் கொண்டுவந்து குட்டையிலும் விழுந்ததாம். நதியிலும் விழுந்ததாம். குட்டையை மண்ணும் சேத்தையும் பாதி அடைத்தது என்றால் பாக்கி பாதி அப்படியே அந்த உஷ்ணத்தில் வற்றி, மொத்தத்தில் குட்டை இருந்த இடம் தெரியாமல் ஆகிவிட்டது. மஹாநதியில் விழுந்த குப்பை கூளங்களோ, அவை பற்றி எரிந்து கொண்டிருந்தாலும் தன் பிரவாஹமே அணைத்து அடித்துக் கொண்டு போய் ஸமுத்திரத்தில் விட்டு இருந்த இடம் தெரியாமல் பண்ணி விட்டது. குப்பை குட்டையை இல்லாமல் பண்ணிற்று. நதியோ குப்பையே இல்லாமல் பண்ணி விட்டது. இந்த மாதிரிதான் தோஷமாகத் தெரிகிற சில பழக்க வழக்கங்கள் பூர்வகாலத்தில் வீர்யத்தோடு இருந்தவர்களைச் சேர்ந்தபோது அந்த தோஷம் அவர்கள் சக்தியில் அடிபட்டுப் போயிற்று. பலஹீனர்களான நாம் அந்த வழக்கங்களைக் கைக் கொண்டாலோ தோஷம் நம்மை அடித்துப் போட்டு விடும். அவர்களுடைய சக்தி நமக்கு இல்லாததால் கலியுகத்தில் எப்படி இருக்கணும் என்று அவர்கள் சட்டம் போட்டுக் கொடுத்திருக்கிறார்களோ அதற்கு அடங்கித்தான் நாம் நடக்கணும்.

— ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்

உனக்கெதுக்கு? பெரியவா நாங்க இருக்கும் போது? நல்ல வரன்னு மனசுக்குப் பட்டதாலும் பண்ணிட வேண்டியதுதான்.''

அவனுக்கு மகா ஆத்திரம் வந்தது.

''என்னைக் கேட்காம கல்யாணம்னு ஆரம்பிச்சேள் எனக்கு ரொம்பக் கோபம் வரும். இப்பவே சொல்லிட்டேன். உங்களுடைய முட்டாள்தனத்துக்கு ஒரு லிமிட் வேண்டாம்?''

''கார்த்திக்! என்ன பேசறே?''

''பின்ன என்ன அத்தை? இன்னும் எத்தனை விஷயங்கள் கவனிக்க வேண்டியது இருக்கு! அப்பா கிட்டச் சொல்லிடுங்கோ. நானு கல்யாணத்தைப் பத்தி யோசனை பண்ண ஆரம்பிக்கிற வரைக்கும் அந்தப் பேச்சு இங்கே அடிபடக் கூடாது!''

''நாங்களெல்லாம் முட்டாள்களாத்தான் தெரிவோம் அவனுக்கு. படிச்சவனோல்லியோ? அவனைப் படிக்க வைக்கணும்னு பிடிவாதம் பிடிச்சியே, உன்னையும் முட்டாளாக்கப் போறான் பாரு!''

விருவிருவென்று அவன் கைகழுவச் சென்றான். தன் பேச்சுக்கான விசனமும் அதற்குக் காரணமானவர்களின் மேல் ஆத்திரமும் எழுகையில்,

''கொஞ்சம் விட்டுப் பிடி மன்னி!'' என்று விசாலம் சொல்வது கேட்டது.

அவன் மௌனமாக உடையை மாற்றிக் கொண்டு வெளியில் கிளம்பும்போது கனேசன் மெல்லிய குரலில் சொன்னான்.

''உன் க்ஷிரெண்டாம், தாரான்னு ஒரு பொண்ணு. என்கிட்டக் கேட்டு உன் நம்பரையும், திருநாகேச்வரம் அட்ரெஸ்ஸையும் வாங்கிண்டு போனாள்!''

''ஓ!''

பஸ்ஸைப் பிடிக்க ஓடுகையில் அவனுக்குச் சிரிப்பு வந்தது. அவனது முரண்பாடான வாழ்வில் எத்தனைவிதமான அசம்பாவிதங்கள்.

அவன் காலேஜை அடைந்து, ஆபீஸ் ரூமை நோக்கி நடக்கும்போது சட்டென்று ஒரு உள்ளுணர்வின் உந்துதலில் நின்றான்.

தாரா அவனைப் பார்த்து உற்சாகமாகக் கை அசைத்தபடி வந்து கொண்டிருந்தாள்.

அவனுக்கு நினைவிருந்ததை விட அழகாக இருந்தாள்.

கிட்ட நெருங்கியதும்,

''நீ இன்னிக்கு வருவேன்னு தெரியும்'' என்றாள். அவள் முகத்தில் தெரிந்த அதீத உற்சாகம் அவனுள் ஒரு பரவசத்தை ஏற்படுத்திற்று.

''யூ ஆர் க்ரேட், யார்! யூனிவர்ஸிட்டியிலே மூணாவது ராங்க் வந்திருக்கே!''

செய்தி தந்த இன்ப அதிர்ச்சியில் அவன் திக்குமுக்காட ஆரம்பிக்கையில் மற்றொரு இன்ப அதிர்ச்சி ஏற்பட்டது. அவன் சற்றும் எதிர்பாராமல் அவள் அவனது கரங்களைப் பூப்போன்ற தனது கரங்களால் இறுகப் பிடித்து,

''எனக்கு இது பிரத்தியேக சந்தோஷத்தை அளிக்கிறது கார்த்திக்!'' என்றாள் ஆங்கிலத்தில்.

(தொடரும்)

# கற்பனையை வெல்லும் உண்மைகள்!

● ''பலவீனங்கள்'' கதையைப் படித்தேன். உண்மைகள் கற்பனையை விட அதிசயமானவை. 25 அல்லது 30 வாரம் நீட்டி முழக்கித் தொடர்கதை எழுதுவதை விட இந்த ஒரு கதையால் ஏற்படக் கூடிய பாதிப்பு மிகுதி. சுப்ரபாலன் பாராட்டுக்குரியவர்.

இப்போது எனக்கு வயது 52. இளமை வேகத்தில் 1950–56ல் இடை விடாமல் ஒரு நாளைக்கு 75–100 என சிகரெட் பிடித்தேன். திருமணமான பின் என் மனைவிக்குப் பிடிக்காததால் ஒரேயடியாக விட்டொழித்தேன். கொஞ்சம் கொஞ்சமாக நிறுத்துவது என்பது நடக்காத காரியம். மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு ஒரேயடியாக ஒழித்துக் கட்ட வேண்டியதுதான்.

76ல் முதல் தடவையாக ஹார்ட் அட்டாக் வந்தது. எடுத்த எடுப்பில் டாக்டர்



கேட்ட கேள்விகள்: ''புகை பிடிப்பீர்களா? குடிப்பீர்களா? இப்போது பிடிக்காவிட்டாலும் முன்பு புகை பிடித்திருக்கிறீர்களா?''

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. இப்போது இல்லை என்றாலும் பல ஆண்டுகளுக்கு முன் சிகரெட் பிடித்திருந்தால் அது இப்போது தன் கைவரிசையைக் காட்டும்; ஹார்ட் அட்டாக்குக்கு வழி வகுக்கும் என்று தெரிய வந்தது. குடிப் பழக்கமும் இப்படித் தான்!

ஜனவரி 83ல் மறுபடி அட்டாக் வந்து, இப்போது உடம்பு தேறி வருகிறது. எதற்கு என் கதை என்றால், எவ்வளவோ புத்திசாலிகளான இன்றைய இளைஞர்கள் இந்தப் பழக்கங்களை 'ஸ்டேட்டஸ் ஸிம்பலாக' எடுத்துக்கொண்டு பின்பற்றக் கூடாது என்று கேட்டுக் கொள்ளத்தான்.

சென்னை-18 வி.என். சுப்பராவ்

● சென்னை வாசிகளிடமிருந்து 'யானைக் கால்', 'மலேரியா' பற்றியெல்லாம் புகார்கள் வருவதே இல்லை என்று டாக்டர் நாராயணன் கூறியிருப்பதை ஒப்புக்கொள்வதற்கில்லை. கொசுக்கள் காரணமாய்ப் பரவும் இந்த வியாதிகள் சென்னையிலும் மிகுதிதான். ஆனால் இங்கே புறநகர்ப் பகுதிகளை விட தனி நபர்களான மருத்துவர்களும், பாலி கிளினிக்குகளும் மலிந்திருப்பதால் நகராட்சியும் அரசும் நடத்தும் ஆஸ்பத்திரிகளுக்குச் செல்லும் நோயாளிகளின் எண்ணிக்கை பெருமளவுக்குக் குறைவு. நாளொன்றுக்கு நான் பார்க்கும் கேஸ்களில் 80 சதம் ஜுரம் என்றால், அதில் 50 சத கேஸ்கள் மலேரியாவும் 20 சத கேஸ்கள் ஃபைலேரியாவும் இருக்கின்றன. இதை நான் குத்துமதிப்பாகச் சொல்லவில்லை. C. MARK என்ற நிறுவனம் ஆய்வு செய்வதற்காக என்போன்ற டாக்டர்களுக்கு அளித்துள்ள பதிவேட்டில் நான் பதிவு செய்யும் கேஸ்களை வைத்துத்தான் சொல்கிறேன். மாநகராட்சி சுகாதார அதிகாரிக்குப் புகார் வரவில்லை என்பதால் பிரச்னை இல்லை என்று சொல்வது தவறு! சென்னை பார்மஸிகளில் விற்கும் மலேரியா மாத்திரைகளின் அளவைக் கணக்கிடச் சொல்லுங்கள், மலேரியா பிரச்னையின் அளவு புரியும்!

சென்னை-5 டாக்டர் வெ. சீதாராமன்

● 'தண்ணி வண்டி வந்திருச்சு!' – நடுப் பக்கக் கட்டுரையை ரசித்துப் படித்தேன்.

## வட்ட மேஜை

உமாபதியின் சித்திரங்களும் 'டாப் கிளாஸ்'.

குரோம்பேட்டை ஆர். மார்க்கண்டன்

● திரு வெங்குசாமி குப்பையிலிருந்து தயாரித்த பொம்மைக் கொலுவைக் கண்டேன். எனது தகப்பனார் (80 வயது) கடந்த பல ஆண்டுகளாகவே குப்பையிலிருந்து பலவித மான பொம்மைகளைத் தயாரித்துப் பிரதி நவராத்திரியின் போது கொலுவைப்பார். நூற்றுக் கணக்கான மாணவர்கள் வந்து பார்த்து மகிழ்வார்கள். சில பொம்மைகளைச் சில மாணவர்களுக்குப் பரிசாக அளிப்பார். பெரும்பாலோர் மகிழ்ச்சியுடன் வாங்கிச் செல்வர். ஆனால் ஒருசிலர் திரு வெங்குசாமி எழுதியதைப்போல் ''வெறும் குப்பைதானே வேண்டாம்'' என்பர். அப்போது என் அப்பாவின் மனம் படும்பாடு அந்த ஆண்டவனுக்கே வெளிச்சம்!

பாண்டிச்சேரி கல்வே சதாசிவம்

● கல்கி நடத்திய பாரதி நூற்றாண்டுப் போட்டிகள் பலவற்றில் கலந்துகொண்ட நான், கல்கி நடத்தும் பாரதி விழாவிலும் கலந்துகொள்ள வேண்டும் என்று மிகவும் பிரயாசைப்பட்டேன். முடியாது போயிற்று. ஆனால் விழா பற்றிய கட்டுரை என் குறையைப் போக்கி விட்டது. கல்கி அவர்கள் பாரதிக்கு நினைவு மண்டபம் எழுப்பினார். நீங்களோ இருவருக்குமே விமரிசையாக விழா எடுத்து ஜமாய்த்து விட்டீர்கள்.

வளவனூர் வி.ஆர். நாகராஜன்

## அத்தியாயம் 13

பல்லாவரம் வளைவில் நெடுஞ்சாலை வழியே உள்ளடங்கி அந்தக் கம்பெனி இருந்தது. முன் பக்கம் நிறையப் புளிய மரங்கள் அதை மறைத்துக் கொண்டிருந்தன. அந்தக் காலை நேரத்தில் பஸ்ஸிலும், மின் வண்டியிலும் நிறையப் பெண்கள் இறங்கி, அந்தக் கம்பெனிக்கு நடந்து போய்க் கொண்டிருந்தனர். பகல் உணவுப் பொட்டலமும், இரண்டு-மூன்று வாரப் பத்திரிகைகளும் அநேகமாய் எல்லோரும் வைத்திருந்தார்கள். அது ஏழு மணி பகல் ஷிப்ட். கம்பெனியை நெருங்குகையில் இரவு ஷிப்ட் எதிர்ப்பட என்னடி ஆச்சு என்று விசாரித்தார்கள். பதில் கேட்டுக் கவலைப்பட்டார்கள்.

இரவு ஷிப்டில் சுத்தமாய் வேலை இல்லை.

''என்னதான் செஞ்சீங்க. தூங்கினீங்களா?''

''முதல்ல தூங்கக் கூடாதுன்னுட்டாங்க. ஒரே பேச்சு பாட்டுத்தான். காலைலே மூணு மணிக்கு சரி தூங்கறதுன்னாத் தூங்குங்கன்னுட்டாங்க. தூங்கிட்டோம்.''

''எங்களுக்கு வேலை இருக்குமா?''

''லடெக்ஸ் வந்தாத்தான்.''

''வருமா?''

''தெரிலே. வரேண்டி. தூங்கி எந்திருச்சது பேஜாரா இருக்கு. ட்ரெயின்ல தூங்கிஸ்டேஷன் விட்டுறப் போறேன்.''

''தமிழ்ச் செல்வி, லடெக்ஸ் வராதாம். முருகபூஷணம் சொல்லிட்டுப் போச்சு. ஒரே பாட்டு கூத்துத் தானும்.''

''ஜாலிதான். உனக்குப் பாடத் தெரியுமா?''

''டே ஷிப்ட்ல பாடினுக் கொன்னுடுவாங்க!''

''வேலை இல்லேன்னு என்ன செய்யறதாம்?''

''தூங்கறது.''

''டே ஷிப்ட்ல தூங்க விட மாட்டாங்க. நைட் ஷிப்ட்ல ஒழிஞ்சு போகட்டும்னு விட்டிருப்பாங்க.''

''இன்னிக்கும் லடெக்ஸ் ரப்பர் வரலேன்னு என்னவும்?''

''ஒரு வாரம் வீட்ல போய்த் தூங்குங்க. பின்னடிப் பார்த்துக்கலாம்னு நோட்டீஸ் போர்டு பேசும்.''

''சம்பளம் போடுவாங்கல்ல.''

''தவடைல போடுவாங்க.''

''அப்பாடி. இப்ப கார்டு பஞ்ச் பண்ணியாச்சு. இன்னி சம்பளம் உண்டு.''

அவரவர்கள் இடத்தில் உட்கார்ந்துகொண்டார்கள். ஜெனரேட்டர் சப்தம், உலை கொதிக்கும் சப்தம் நீராவி சப்தம், எதுவும் இல்லை. வழக்கத்தை மீறி அங்கே ஒரு மௌனம் நிலவியது. அந்த மௌனம் எவரையும் பேசவொட்டாமல் செய்தது.

அது கருத்தடைச் சாதனங்கள் செய்யும் தொழிற்சாலை. லட்சக் கணக்கில் அரசாங்க நிரோத் தயாரிக்கப்பட்டது. நிரோத்போல் பல கருத்தடை உறைகள் தயாரிக்கப்பட்டன. மெல்லிய ரப்பர் உறைகள் செய்ய உயர்ந்த ரப்பர்க்குழம்பு-லடெக்ஸ்-அவசியம். உள்நாட்டிலேயே கிடைக்கும். ரப்பர் எஸ்டேட்டில் மூன்று மாதமாக ஸ்டிரைக். உற்பத்தி முடங்காமல் இருக்க உடனே இறக்குமதி லைசென்ஸ் வாங்கி வெளி நாட்டி



விருந்து ரப்பர் குழம்பு தருவிக்கப்பட்டது. மலேசிய ரப்பர். அதை ஏற்றி வந்த சரக்குக் கப்பல் நிற்கத் துறைமுகத்தில் இடமில்லை. கப்பல் துறைமுகத்தில் காத்திருக்காமல் பம்பாய் போய்விட்டது. பம்பாயில் இறங்கி வெகு அவசரத் தேவை என்று நிர்ணயிக்கப்பட்டு, உடனடியாய்த் துறைமுகத்திலிருந்து விடுவிக்கப்பட்டு லாரிகளில் ஏற்றப்பட்டது. பத்து நாட்களுக்கு முன்பே தொழிற்சாலைக்குள் வந்து சேர வேண்டிய சரக்கு. கடைசிச் சொட்டு ரப்பர் பால் கையிருப்பு தீரும் வரை வராமல் போய் விட்டது.

கை படாமல் யந்திரம் தயாரிக்கும் உறைகளை இந்தப் பெண்கள் மெல்லிய தகரப் பேப்பரில் மூடி அடுக்கி, டப்பாவில் போட்டு பேக்கிங் செய்வார்கள். ஒவ்வொரு உறையையும் பலவித சோதனைகளில் சடுபடுத்துவார்கள். ஒரு நாளைக்குப் பல லட்சம் உறைகள் சோதனை செய்து மூடி அடுக்கிப் பெட்டியில் இட்டு நகர்ந்து கொண்டே இருக்க வேண்டும். நெற்றி வியர்வையைத் துடைக்கக் கூட நேரமின்றி வேலை இருக்கும். ஒரே மாதிரி வேலை எனினும் மடமடவென்று செய்ய வேண்டும். ஓயாது ஓடிக் கொண்டிருக்கும் தொழிற்சாலை. இன்று மௌனமாய், மலங்க மலங்க விழித்துக் கொண்டிருக்கிறது.

மேற்கொண்டு வேலைக்கு லடெக்ஸ் ரப்பர் வரவேண்டும். வந்துவிடும். வந்தே ஆக வேண்டும்.

''வரலேன்னு என்னடி ஆவும்?''

''த்த கம்மாக்கெடடி. தொண தொணன்னு''

"சும்மா இருந்தா எப்படிய்யா'' வில்வநாதன் கோபத்தில் இரைந்தான். இதோ அதோன்னு விடியறவரைக்கும் மல்லாக்கப் படுத்துத் தட்டிவீங்க. ஒரு போல்ட் கூட நகரலே. தள்ளி வா. நான் பாக்கறேன். ம்... முடியாது. இது முடியற சமாசாரமில்லே. நான் வேற லாரி மாத்தறேன்.''

''த்தோ ஒன்னவர்லே போய்டலாம் சார். இது ஒன்னு கூட்டிட்டா மத்தது சுளுவா வந்துரும்.'



''கபூர், வண்டி எடு. இவங்க கூடப் பேசிப் புண்ணியமில்லே. திருப்பதி போய் இன்னொரு லாரி புடிக்கலாம்.''

''எப்படி சார் மாத்தறது. இருநூத்தி யஞ்சு கிட்டர் டிரம். அசைக்கக் கூட முடியாது சார். தப்பித் தவறிச் சாஞ்சதுன்னு பொத்துக்கும்.''

''அசைக்க நகர்த்த முடியாது?''

''முடியாது சார்.''

''கிரேன் கிடைக்குமா பார்ப்போம்.''

''எடுத்து வைக்கவா. திருப்பதிலியா?''

''எடு கபூர் வண்டியை. ஏதாவது செய்துடணும்.''

''யோசனை செய்ங்க சார். திருப்பதில க்ரேன் இருக்குமா? மெட்ராஸுக்கு போன் போட்டுச் சொல்லுவோம்.''

''நாம டிரை பண்ணிட்டு மெட்ராஸைத் தொந்தரவு செய்யலாம். எடு வண்டியை.''

''நேர மெட்ராஸ் போய்க் கையோட லாரி, க்ரேன் கூட்டியாந்தா...''

''எடுப்பா வண்டிய. ஒரு மரியாதைக்குக் கன்ஸல்ட் பண்ணினு...தொண்தொணன்னு''

''இன்னிக்கும் லெடெக்ஸ் வராதாம். எத்தி வந்த வண்டியைக் காணமாம்.''

''என்னடி ஆவும்?''

''கவலைப்படாதே. நம்ம ஹீரோ தேடிக்கினு போயிருக்காரு.''

''பெரியவரா?''

''மொதலாளி இல்லேடி. சம்பளம் எடுத்தாருவாரே விசுவநாதன். அவுரு.''

''உயரமா, கருள் கிராப்பா... தங்கச் செயின் போட்டுக்கினு... அவுரா?''

''த்தோடி. பத்தினி. செயினு வரைக்கும் பாத்திருக்கியா? எனக்கு பேர் மட்டும்தான் தெரியும். தங்கமா பித்தளையான்னு தெரியாது. தமிழ் செல்வி, இவ பேசறதைக் கேளேன்.''

''என்னம்மா விஷயம்?''

அவள் காதோடு இவள் சொல்ல, இவள் காதோடு அவள் சொல்ல, மௌனம் விடியல் நேரத்து இருள் மாதிரி கலைந்து அங்கே தும்பிகள் பிடிக்கும் சத்தமாய்க் கிசுகிசுப்புகள் தொடர்ந்தன.

''லாரி ஏற்பாடு செய்து குடுத்திட்டேன் சாமி. க்ரேன் எங்க பிடிக்க... இங்க கேட்டுச் சொல்றேன். தேவஸ்தானம் க்ரேன் வச்சிருக்கும்.''

''தருமா?''

''கேட்டுச் சொல்றேன்.''

''ஹலோ எவறு அக்கட. பாக உன்னாரா?'' விஸ்வநாதன் நகம் கடித்துத் தவித்தான்.

''தேவஸ்தானம் க்ரேன் தராது சார். இன்னொரு எடம் சொன்னுங்க. கேட்டுறலாம். தம்பி காபி டிபன் சாப்டீங்களா?''

''பல்லுகூடத் தேய்க்கலே.''

''விளக்கிட்டு வாங்க. சாப்டலாம்.''

''க்ரேன் கெடைக்கணும் சார்.''

''பல்லு விளக்கவா?''

''ப்ளீஸ். தமாஷ் பண்ற நேரமில்லே. க்ரேன் கெடைக்குமா சொல்லுங்க.''

''ஹலோ எவறு அக்கட பாக உன்னாரா?''

விஸ்வநாதனின் வாய் குழம்பிக் கசந்தது. வயிறு குழைந்து எகிறிற்று.

''அடடே... க்ரேன் இப்பத்தான் பெரிய பாளையம் போச்சாம். லாரி கெணத்துல மாட்டிக்கிச்சுன்னு கூட்டிப் போனுங்களாம்''

''எந்த லாரி... யார் கூட்டிட்டுப் போனது?''

''தெரியலிங்களே.''

''எப்பப் போச்சாம்.''

''இப்பத்தான் அரை அவுருன்னுங்க.''

''கபூர் கிளம்பு. உங்க லாரி எங்கே? இந்தாப்பா டிரைவர் கார் பின்னாடியே வா. இந்தா மொத்த வாடகை நானூறு ரூபா.''

''சந்தோஷம் தம்பி. டிபன் சாப்பிட லிங்களே.''

''க்ரேன் பிடிச்சுப் பல் தேய்ச்சுட்டுச் சாப்பிடறேன். நீங்க கவலைப்படாதீங்க.''

''தம்பி தமாஷாப் பேசறீங்க.''

''தமாஷில்லே. வயத்தெரிச்சல்.''

''எப்போ வருவாரோ எந்தன் கலி தீர... எப்போ வருவாரோ...''

'' பாடாதடீ. வரவனும் ஓடிப்பூடப் போறான்.''

''எங்கப் போயிட முடியும். சம்பளம் போட இங்க வந்துதானத் தீரணும்.''

''யாரைச் சொல்ற?''

''காலேல நீ கேட்டியே... தங்கமா பித்தளையான்னு அவருதான்.''

## பழிக்குப் பழி



இருபதே நாட்களான ஒரு யானைக் குட்டியை ஒரு புலி அடித்துக் கொன்றதால் டேராடூன் அருகில் உள்ள ராஜாஜி காட்டு வனவிலங்ககத்தின் அமைதியே சீர்குலைந்திருக்கிறது. எல்லா யானைகளும் பெரிய ஓலக் குரல் எழுப்பிக் காட்டில் கண்டவற்றை நாசம் செய்கின்றன. அன்றிலிருந்து பழிக்குப் பழி வாங்கத் துடிக்கும் யானைகளின் பிளிறல் ஒலி கேட்டுக் கொண்டே இருக்கிறது. காட்டிலாகா அதிகாரிகள் காட்டில் எந்தப் பகுதிக்குப் போகவும் அஞ்சிக் கொண்டிருக்கிறார்கள். —ஆதாரம்: ஸ்டேட்ஸ்மன்

—ராஜீவி நரசிம்மன்

சண்டிகார் பாடத் திட்டக் குழுவிலிருந்து ராம், பத்ரா என்ற இருவர் 40 வருட சர்வீஸுக்குப் பின் ஒரே நாளில் ரிடையர் ஆனார்கள். இவர்கள் வசித்தது ஒரே தெருவில், படித்தது ஒரே பள்ளியில். மேலும் வேலைக்குச் சேர்ந்ததும் ஒரே ஊரில். இவர்கள் இருவரையும் வேலைக்குச் சேர்த்தவர் ஒருவர்தான். இவர்களுக்கு ஒரே சமயத்தில் பதவி உயர்வு கிடைத்தது. பிறகும் ஒரே குழுவில்தான் இருந்தார்கள்.

ஆதாரம்: டிரிப்யூன்

தகவல்: கணபதி சுப்பிரமணியம்.



''அடி சக்கை. ஒனக்கு அந்தாள் பேல ஒரு கிக்கா? அவருக்குக் கல்யாணம் ஆகி ரெண்டு பொட்டைப் பசங்க இருக்குது.''

''கிக்குமில்ல... குக்குமில்ல.''

''பாட்டுப்பாடற...எப்பவருவாரோன்னு''

''அந்தாள் வந்து ரப்பர் ஸ்டெக்ஸ் கொண்ணாந்து மிஷினு ஓடி வேலை தொடங்கணும்.''

''வேலை மேல அவ்ளோ இஷ்டமா?''

''துட்டுடி. இவ சொல்ற மாதிரி ஒரு வாரம் வேலை இல்ல. வீட்டுக்குப் போனா ஆட்டா பாலு துட்டு, ஊட்டு வாடகை யார் குடுக்கறது. சம்பளம் முழுசா வந்தாலே ஒன்னைப் பிடி என்னைப் பிடின்னு இருக்கச் சொல்ல....''

''லாரி கிடைக்கலேச்சாம். விசுவநாதன் மடக்கி எடுத்தாராம். இப்பத்தான் போன் வந்துதாம். ஆந்திராலேர்ந்து.''

''ஆந்திரா எவ்ளோ தொலைவுமா?''

''த்தோ... மாம்பலம்தாண்டி.''

''சீ.... சாப்பாட்டுக்கு மேலே வேலை இருக்குமா?''

''நீ போய்ச் சாப்பிடு கபூர். வண்டி ஓட்டறவன் நீ. சாப்பிடு. எங்க இந்த கிரேன் யார் வாடகைக்கு எடுத்தது?''

க்ரேன் டிரைவர் கைநீட்ட திருப்பதி எல்லையில் ஓர் ஓட்டல் வாசலில் விஸ்வநாதன் ராவுத்தரைச் சந்தித்தான்.

''ஐயா நமஸ்காரம். நீங்க யாரு ராவுத்தர் கம்பெனியா?''

குரல் பரிச்சயம் மிகுந்து முகம் மறந்து போன மாதிரி பாவத்துடன் ராவுத்தர் முகம் சுருக்கி விஸ்வநாதனைக் கவனித்தார். முதல் பார்வையில், முதல் கைகுப்பலில் அந்த இளைஞனை அவருக்குப் பிடித்து விட்டது.

''அடேடே விஸ்வநாதன் நீங்கதானா... ரொம்ப சந்தோஷம் தம்பி. அல்லா கருணை உள்ளவன். பெரும் பேராளன். உங்களை இவ்வளவு சீக்கிரமாப் பார்ப்பேன்னு நினைக்கவே யில்லே. என் நன்றியை எப்படிச் சொல்றதுன்னே தெரியலே. உங்க உதவி பெரும் உதவி மறக்கவே மாட்டேன்.'' நீண்ட நீண்ட புகழுரைகள். மலர மலர முகஸ்துதிகள். விஸ்வநாதன் உதவி கேட்கக் கூசினான். ஆனால் வேறு வழியில்லே. கேட்டான்.

''இவ்ளோதானே. ஒங்களுக்கு இல்லாமலா. இதுக்குப் போய் இவ்ளோ தயங்கணுமா? எடுத்துக்கிட்டுப் போங்க. என் வேலை இதனால பாதிக்கப்படாது. எங்க மடக்கிக்க வண்டி? புத்தூர் கேட்டா? நானும் வரேன் தம்பி. டிபன் முடிச்சீங்களா? ரொம்பக் களைப்பா இருக்கீங்களே.''

இதமான பேச்சு விஸ்வநாதனை மேலும் களைப்புறவைத்தது. ஒரு வாய் காப்பி அவசியமாய்த் தேவைப்பட்டது. ஓட்டலில் பல் துலக்கி முகம் அலம்பி டிபன் காப்பி முடித்தான்.

ராவுத்தர் காரும், க்ரேனும், லாரியும் பின் தொடர ஸ்டெக்ஸ் வண்டியிடம் போனான்.

எண்பது நிமிடத்தில் ஸ்டெக்ஸ் புரம் லாரி மாறிற்று. மேல் தூசு கூடக் கலையாமல் இடம் பெயர்ந்து புதிய வாடகை லாரியில் அடுக்கப்பட்டது.

''ஐயா க்ரேன் வாடகை.''

''உங்க கிட்ட வாடகையா. மாட்டேன் தம்பி. உதவி செய்ய அல்லா இடம் கொடுத்த கருணை பெரிசு.''

''ஐயா இது கம்பெனிச் செலவு. என்னுடையது இல்லே. வாடகை சொல்லுங்க.''

''யாருதா இருந்தா என்ன? நான் வாடகை வாங்க மாட்டேன். தம்பி ஒரு முறை நம்ப கடைக்கு வரணும்.''

விஸ்வநாதன் மௌனமாய் நின்றான். குளிர் வாய் வாடகை வாங்க மறுத்த அன்பில் ஊழ்கினான்.

''கடவுள்.... அது பத்திய நம்பிக்கை இதுவெல்லாம் நான் அதிகம் யோசிச்சதில்லே. உங்களைப் பார்க்கறப்போ, பேசறப்போ எனக்கும் இதம்மா ஒரு நம்பிக்கை வருது ராவுத்தர். என் நன்றியை எப்படிச் சொல்றது....''

''எல்லா மதமும் சொல்ற கடவுள் ஒன்று தான். அன்பே கடவுள். எல்லையில்லாத பரம்பொருளை உணரும் விதம் அன்பு செய்யும்போது தெரியுது. ஸ்நேகத்துக்கும் அன்புக்கும் எல்லையில்லாத மாதிரிதான் அவன் அருளும் கருணையும். நன்றி சொல்றது எதுக்கு? நாம ரெண்டு பேரும் ஒரு தரிம்சையில் இருக்கோம். இது மாதிரி தரிம்சை இல்லாத நேரத்தில் இதம்மா ஒரு தடவை பார்த்துப் பேசுவோம். போய்ட்டு வாங்க தம்பி'' காருக்குள் அவன் உட்கார்ந்ததும் மெல்லக் கதவைச் சாத்தினார். சலாம் செய்தார்.

ஸ்டெக்ஸ் லாரி முன்னால் போக, கார் பின்னால் நகர்ந்தது. புத்தூர் மதகு தாண்

டிற்று. வசந்தா மனகண் மின்னினுள். அந்தக் குழந்தை என்னுயிற்றே. செக் போஸ்ட் தாண்டிற்று. அந்த லாரி டிரைவர் கேலி செய்தார்களே... அவன் பேர் என்ன தம்பிராஜு. மறுபடி அவனைச் சந்திக்க முடியுமா? எவ்வளவு அற்புதமான உதவி. வடமலைப்பேட்டை, பெரியபாளையம்தாண்டி யதும்இணைற்றில்கவிழ்ந்த லாரி தென்பட்டது. ராவுத்தர் முகம், சிரிப்பு, கைகூப்பல் படர்ந்தது. புழல், செங்குன்றம், செம்பியம் லாரி முன் போகக் காரில் துவண்டபடி விஸ்வநாதன் போனுன்.

“அம்மா... யாரும் கூச்சல் போடாதிங்க. நாளைக்கு வேலை உண்டு. லெடெக்ஸ் வருதாம். அரை அவர்ல வந்துடும். உள்ள நைட் ஷிப்ட் க்ளீன் பண்ணி வேலை ஆரம்பிச்சுடும். இப்ப எல்லாரும் போலாம்னுட்டாங்க. கூச்சல் போடாதப் போங்க.'' தலைவி மாதிரி உள்ளவள் சொல்ல மெல்லக் கலைந்தார்கள். இரண்டு மணி நேரம் முன்னதாக வீட்டுக்குப் போகும் சந்தோஷம் சிரிப்பாய்ப் பொங்க வெளியே வந்தார்கள்.

லாரி உள்ளே நுழைய வழி கேட்டு ஹார்ன் அடித்தது. பெரிய கதவுகள் திறந்தன.

''என்லப்பா வண்டில. லெடெக்ஸ் ரப்பரா? டெலிவரி செலான் வச்சிருக்கியா?'' கேட் கீப்பர் வழக்கம் போல் கேட்க விஸ்வநாதன் பின்னுல் காரிலிருந்து சீறினுன்.



கோகுலம்

கௌரவ ஆசிரியர் :
அழ. வள்ளியப்பா

96 பக்கங்கள் - தனிப்பிரதி ரூ. 2.
ஆண்டுச்சந்தா ரூ. 24
கோகுலம், கிண்டி, சென்னை-32.



''வாட்ச்மேன் வண்டிய விடு. முதல்ல. சலான் கேக்கற நேரம் பாரு.''

லாரி உள்ளே நுழைந்தது. விஸ்வநாதன் கால்கள் நடுங்க மிஷின் ரூம் போனுன். யாரோ கை குலுக்கினுர்கள். முதுகில் தட்டினுர்கள். கூட்டமாய்ப் பெண்கள் வெளிவர ஒதுங்கி நின்றுன்.

''தமிழ்ச் செல்வி, தங்கச் செயின்தாண்டி. சொக்கத் தங்கம். கழுத்துல தேய்ஞ்சு தேய்ஞ்சு தைஞ்சு போனுக் கூட நிரு நிருன்னு இருக்குது பாரேன்.'' யாரோ ஒரு பெண் பேசிக் கொண்டு போனுள். யாரோ சிலர் சிரித்தார்கள்.

''சார் பெரியவர் போன். கூப்பிடுறுர் உங்களை.''

''விஸ்வநாதன் குட் ஜாப். வெரி குட் ஷோ. ஐயம் ஹேப்பி அபௌட் யூ. கீப் இட் அப்.''

போன் வைக்கப்பட்டு விட்டது. தளர்ந்து விஸ்வநாதன் நாற்காலியில் சாய்ந்தான். இதற்கு—இந்த நாலு வார்த்தைக்குத்தான் இந்த அலையலா? இந்த வேதனையா. இந்தத் தவிப்பா? இது செய்யத்தான் பிறப்பா? வாழ்நாள்பூராவும் லெடெக்ஸ் தேடல்தானு.''

மறுபடி மணி அடித்தது.

''ஹலோ விஸ்வநாதன் ஹியர்.''

''நான் தாரிணி. நீங்கதானு. எப்ப வந்தேள்?''

''இப்பத்தான். பத்து நிமிஷம் ஆச்சு.''

''உடனே எனக்குப் போன் பண்ணக் கூடாதா? நிறைய வேலைன்னு சொல்ல வேண்டாம். இத்தனை வேலைக்காரா ஆபீஸையே கல்யாணம் பண்ணிண்டிருக்க வேண்டியதுதானே. உங்களுக்கு எதுக்குப் பொண்டாட்டி, குழந்தைகள்.''

''குழந்தைகள் எப்படி இருக்கா-காயத்ரி?''

''உயிரோடதான் இருக்கா. செத்துச் செத்துப் பொழைக்கிறது நான்தான். நான் மட்டும்தான். என்னைப் பத்திக் கவலையே கெடையாதான்னு உங்களுக்கு? தனியா ஒரு பொம்மனுட்டி....'' தாரிணி பேச முடியாமல் அழுதாள். ''ஏன் இப்படி வதைக்கிறேள். ஒரு வார்த்தை போன் பண்ணிட்டுப் போப்படாதா... அத்தனை என்ன துவேஷம். நானும் பொறுத்துப் பொறுத்துப் பாக்கறேன். நெஞ்சைக் கீறிக் கீறிப் புண்ணுக்கறேளே. எம்மேலே ஏன் இத்தனை கடுப்பு. இத்தனை விஷம் கூடாதுன்னு மனுஷாளுக்கு.''

போன் பளிச்சென்று வைக்கப்பட்டது.

எனக்கா விஷமா? பாம்பா பல்லியா நான். கீறிக் கீறிப் புண்ணுக்க நகமுண்டா எனக்கு? குதிரைகளுக்கு எங்கேனும் நகம் உண்டா? நகத்தில் விஷம் உண்டா? குறைந்தபட்சம் கொம்பிருக்கிறதா குதிரைக்கு?

அவல ஆடுகள் கூட இங்கே
கொம்புடன் ஜனித்ததாக

விஸ்வநாதன்நாற்காலியில்சரிந்து வெறித்தபடி கவிதை நெய்யத் தொடங்கினுன்.

(தொடரும்)



# நான் ஜனாதிபதி ஆகவில்லை

கோமதி சுவாமிநாதன்

நேற்றுக் காலையில்தான் எனக்கு அந்த யோசனை தோன்றியது. பாரதத்தின் ஜனாதிபதி பதவியை ஏற்றுக் கொண்டு ராஷ்டிரபதி பவனில் போய் உட்கார்ந்து விட்டால் தேவலை என்று நினைக்க ஆரம்பித்து விட்டேன்.

இதிலொன்றும் தப்பு இல்லையே. ஜனநாயக நாட்டில் ஓட்டுரிமை உள்ள எந்தப் பிரஜையும் ஜனாதிபதியாகலாம். சமீபத்தில் நடந்த ஒரு தேர்தலில் கூட, சட்டமன்றத் தேர்தல் தான், என் ஓட்டுக்காகப் பல ஆசாமிகள் வந்து குழையடித்தார்களே! — எனக்கு ஓட்டுரிமை இருக்கிறது என்று ஊர்ஜிதமாயிற்று.

ஏதாவது பலத்த கட்சி சார்போ, பண பலமோ தேவைப்படும் என்று சொல்லலாம். அதுகூட அவ்வளவு பிரயோசனப்படவில்லை என்று சமீப காலம் நிரூபித்து விட்டது.

இதையெல்லாம் சில நிமிடங்களில்யோசனை செய்து விட்டுத்தான் நான் ராஷ்டிரபதி பவனைப் பற்றி ஆசைப்பட ஆரம்பித்தேன் என்று வைத்துக் கொள்ளலாம்!

இந்த யோசனை என் மனத்தில்வியாபிக்கக் காரணமாக இருந்தவர் தினசரி காலையில் எனக்கு அரைக் கவுளி சன்னமான ரவேஸ் வெற்றிலையை எடுத்துக் கட்டி வைத்துக் கொடுக்கும் வெற்றிலை வியாபாரிதான்.

நேற்றுக் காலையில் வழக்கம் போல் அவர் முன் போய் நின்றேன். பத்தடி தூரத்திலேயே என்னைப் பார்த்ததும் வெற்றிலையை எடுத்து நீட்டும் அவர், நான் ஒரு அடி தூரத்தில் வந்து நிற்பதைக் கூடப் பொருட்படுத்தாமல் முன்னால் குவிந்திருந்த வெற்றிலைக் கட்டுக்களைப் புரட்டிக் கொண்டிருந்தார்.

''வெற்றிலை தரீங்களா?'' என்றேன் நான். இப்படி எனக்குக் கேட்டு நிற்க அவர் சந்தர்ப்பமே கொடுத்ததில்லை.

என்னை ஏறிட்டுப் பார்த்தார். சர்வ அலட்சியமாக ''இன்னிக்கு ரவேஸ் இல்லீங்க! யாரோ வாங்கிட்டுப் போயிட்டாங்க'' என்று சொல்லிவிட்டு அவர் காரியத்தில் ஈடுபட்டார்.

''என்னங்க! தினசரி எடுத்து வைப்பீங்களே!... இன்றைக்கு....'' என்று தயங்கினேன்.

''அட! இல்லேன்னா இல்லே. தீர்ந்து போச்சு. உங்களுக்குத் தினம் எடுத்து வைக்கணும்னு சட்டமா?.... பெரிய ஜனாதிபதி மாதிரி கேட்கறீங்களே!... வேணும்னா பொறுத்து வந்து பாருங்க. பொறுக்கினபிறகு இருந்தாத் தரேன்'' — என்னைப் பார்க்காமலேயே பேசினார். அவர் வேலையைப் பார்த்தார்.

நான் பக்கத்துக் கடையில் கொஞ்சம் வெற்றிலை வாங்கிக் கொண்டு திரும்பும் போதுதான், அவர் சொன்ன சில வார்த்தைகளை மனத்தில் உருட்டிப் பார்த்தேன்.

எந்த ஜனாதிபதியும் அவர் சொன்னது போல வெற்றிலைக் கடையில் வந்து அதிகாரம் பண்ணி வெற்றிலை கேட்டிருக்க மாட்டார்! ஆனாலும் நானே ஜனாதிபதியாகப் போய் டில்லியில் உட்கார்ந்தால், தினசரி இந்தியன் ஏர்லைன்ஸ் ஃபிளைட்டில் இரண்டு

கட்டு வெற்றிலை வரவழைக்க முடியும். அதற்காக ப்ரிட்ஜ் ஒன்றைத் தனியாக ஏற்பாடு செய்யலாம்!

இதற்கு முன்பு இருந்த ஜனாதிபதிகள் யாரும் வெற்றிலை புகையிலைப் பிரியர்களாக இருந்தார்களா என்று யோசித்தேன். அப்படியிருந்ததாகத் தெரியவில்லை. நான் போய் உட்கார்ந்தால் அந்த விஷயத்தில் ஓர் ஆரம்ப கர்த்தாவாக இருக்கலாமே!

ஒரு கணம் மனத்தில் ராஷ்டிரபதி பவனை மனக் கண் முன் கொண்டு வந்தேன். நான் பல தடவைகள் அங்கு போயிருப்பதால் அதன் ரூம் முடுக்கெல்லாம் ஞாபகத்துக்கு வந்தன.

சில வருடங்களுக்கு முன் ஒரு மிக அகலமான வெளி நாட்டு ஜனாதிபதி வந்தார் என்று – நாடு அகலமில்லை! ஜனாதிபதி அகலம்! அவருக்கு விசேஷ நாற்காலி தயார் செய்தார்கள் மத்திய அரசில். அவர் நாடு திரும்பிய பின் அந்த நாற்காலியை ராஷ்டிரபதி பவனில் விருந்தினர்கள் தங்கும் அறைகள் ஒன்றில் வைத்திருக்கிறார்கள்.

'அந்த நாற்காலியில், அதைத்தோட்டத்தில் எடுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்து, ஆனந்தமாக வெற்றிலையைக் குதப்பினால் ஆஹா....' நினைத்துப் பார்க்கவே மகிழ்ச்சியாக இருந்தது. ஜனாதிபதி ஆகிவிட வேண்டும் என்ற ஆசை விசுவரூபம் எடுத்தது.

வீட்டிற்குள் நுழைந்தவுடன் என் மகன் தலை தென்பட்டது. ''இங்கே வா!... உன்னுடன் கலந்து பேசி விட்டு நான் ஜனாதிபதி தேர்தலில் நிற்பது பற்றி முடிவெடுக்க வேண்டும். நான் ஜனாதிபதியாக டில்லிக்குப் போவதில் உனக்கு ஏதும் ஆட்சேபமில்லையே?'' என்றேன்.

''இன்றைக்கு வெயில் கூட அதிகமாக இல்லையே!'' என்று அவன் சொல்லிக் கொண்டது எனக்குக் காதில் விழுந்தது.

''அப்பா!... நீங்க ஜனாதிபதியை மையமாக வைத்துக் கதை எழுத முயற்சி செய்யலாம். அதைக்கூடப் பிரமாதமாக இர்விங் வாலஸ் பண்ணிப்பிட்டான். நம்ப நாட்டுப் பழக்கம், யாராவது மந்திரியை இழுத்து வைத்துக் கதை பண்ணுவதோடு சரி. உங்களுக்கு எதுக்குத் தூரத்திலே இருக்கிறவர்களைப் பற்றி யெல்லாம் கதை எழுத அக்கறை?...உங்களுக்கு அதெல்லாம் வராது. பக்கத்திலே இருக்கிறவங்களை வைச்சு ஏதாவது எழுதுங்க. வேண்டாத வம்பெல்லாம் எதற்கு?'' என்று சொல்லிக் கொண்டே நழுவப் பார்த்தான்.

''இந்தா! இங்கே நில்லு கொஞ்சம்! நான் பிரஸிடென்டை வச்சுக் கதை எழுதறதைப் பற்றி உன் இட்ட யோசனை கேட்கலே! நானே பிரஸிடெண்டாயிடலாம்னு பார்க்கறேன்'' என்று சொன்னதோடல்லாமல் இந்த யோசனை தோன்றிய விதத்தையும் வெற்றிலைக்காரர் வியவகாரத்தையும் விலக்கினேன்.

அவ்வளவுதான். அங்கே ஒரு மகாநாடே கூடிவிட்டது. அன்றைக்கு ஞாயிற்றுக்கிழமை. அடுப்பில் ரசம் கொதித்துக் கொண்டிருந்த போதிலும் பாதியிலேயே காஸ் அடுப்பின் மென்னியைப் பிடித்து விட்டு என் மனைவியும் தன் அபிப்பிராயங்களை அள்ளி வீச வந்து சேர்ந்தாள்.

''நான் பதவி ஏற்றவுடன் பிரஸ் செகரட்டரி, பெர்சனல் செக்ரட்டரி என்கிற மாதிரி பான் செகரட்டரி ஒருவரை நியமித்து விடுவேன். எனக்கு ஒழுங்காக வெற்றிலை, சீவல், புகையிலையை இருபத்தி நாலு மணி நேரமும் தயாராக வைத்திருக்க வேண்டிய டியூட்டி அவருக்கு'' என்று ஆரம்பித்தேன்.

''அப்பா... நான் கொஞ்சம் சீரியஸாச் சொல்றேன். உங்களுக்கு இந்த ஆசையும் வேண்டாம், பதவியும் வேண்டாம்... ஏன்னு விளக்கம் சொல்றேன்.. தினசரி யாராவது வெளிநாட்டு ராஜா, ஜனாதிபதின்னு டில்லிக்கு வந்து கொண்டே இருப்பாங்க. ஏரோடிரோமுக்குப் போகணும். அவங்க அணிவகுப்பு மரியாதை நடக்கிற வரை இருக்கணும். அவ்வளவு நேரம் உங்களாலே வெற்றிலை புகையிலை போடாமல் இருக்க முடியுமா? நடுவில் போய்த் துப்பி விட்டு வருவது மரியாதைக் குறைவாகத் தோன்றலாம்!'' என்றான் என் மகன்.

''அதையெல்லாம் கூடச் சமாளித்து விடலாம்!... நம்ம ஜனாதிபதி அதிகம் பேசமாட்டார்ங்கிற ஒரு இமேஜைக் கிரியேட் பண்ணி விடலாம். பத்து நிமிஷத்துக்கு மேலே எந்த புரோகிராமுக்கும் ஒத்துக்க மாட்டார்ங்கிற ஒரு வழக்கத்தைக் கொண்டு வரலாம். ஆனாலும் உங்களுக்கு ஞாபக மறதி ஜாஸ்தி. நம்ப வீட்டு வாசல், முற்றம் இத்யாதி இடங்களில் துப்புவது போல ராஷ்டிரபதி பவனிலும் துப்பி வைத்தால்...'' என்று ஆரம்பித்த என் மகனை இடைவெட்டினாள் என் மகள்.

''இரண்டு துப்புரவுப் பணியாளர்கள் தயாராக நிற்பார்கள்! பாதுகாவலர்கள் நிற்கவில்லையா? அது போல... இதெல்லாம் ப்ராப்ளம் இல்லை. திடீர்னு பிரதமர் உங்களோடு முக்கிய சமாசாரம் பற்றிப் பேச அரை மணி நேரம் உட்கார்ந்துவிட்டார் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்ப எப்படிச் சமாளிப்பீர்கள்?'' என்று கேட்டாள் அவள்.

''அது ஒரு பிரச்னைதான். சமாளிக்கலாம். நடுவிலே ஐந்து நிமிடம் உள்ளே போய்வரும் பாவனையில் ஒரு கொதப்புக் கொதப்பிவிட்டு வந்து விடலாம்!... இல்லே பிரதமர்கிட்டே 'நீங்க பாட்டுக்குப் பேசுங்க! நான் ஒரு வெற்றிலையைப் போட்டுக் கொண்டே தலை ஆட்டுகிறேன்...' என்று சாத்விகமாக ஒரு ஏற்பாட்டைச் செய்து கொள்ளலாம்'' என்றேன் நான்.

''வெற்றிலையே கிடைக்காத வெளி நாட்டுக்குப் போக வேண்டிய அவசியம் வந்து விட்டது. அண்டார்ட்டிக்காவில் தட்சிண கங்கோத்ரியில் ஒரு அஸ்திவாரக் கல் போடுகிற சாக்கு!.... அப்போ என்ன செய்வீர்களாம்?'' என்றாள் என் மனைவி நையாண்டியாக.

'அந்த ட்ரிப் முடியும்வரை வெற்றிலை புகையிலையைப் பதமாக வைத்திருக்க முடி



**இயற்கையின்
சீற்றங்களை எதிர்த்து
நிற்பதற்கென்றே
தயாரிக்கப்படுபவை
ராம்கோ அஸ்பெஸ்டாஸ்
சிமெண்ட் தகடுகள்.**

## இயற்கை வலுவேற்றிய உறுதி — இணையற்ற 'ராம்கோ' தரத்தின் தனிப்பாணி

உன்னத தரக்கட்டுப்பாட்டுக்கென நிர்ணயிக்கப்பட்ட எல்லா சோதனைகளையும் இயல்பாகவே கடந்து காலம் முழுதும் கடுமையான தட்பவெப்பச் சூழ்நிலைகளைத் தாங்குமாறு 'ராம்கோ' அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகள் உற்பத்தி செய்யப்படுகின்றன. அதிநவீன தொழில் நுட்பம், மிகக் கடுமையான தரக்கட்டுப்பாடு— இவையே "ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகள் அனைவராலும் தேர்ந்தெடுக்கப்படுவதன் இரகசியம்.





Ramco

சதர்ன் அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் லிமிடெட்
739, அண்ணா சாலை, சென்னை-600 002. போன் : 82006
பரிபூரண விற்பனையாளர்கள் : ராஜா சாரிடி டிரஸ்ட்

ராம்கோ அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகளும் மற்ற உபகரணங்களும்- தரமான கூரைகளுக்கு மட்டுமல்ல நிரந்தரமான பாதுகாப்புக்கும் கூட.

CAS SACL 883 TAM A

புமா என்று பார்ப்பேன். இல்லாதபோனும். இந்த ட்ரிப்புக்கு உதவி ஜனாதிபதி பெயரைச் சிபாரிசு செய்து விட்டுச் சீவல் போட்ட லத்தை ஆனந்தமாகக் கையில் எடுத்துக் கொண்டு மோகல் கார்டனுக்கு 'வாக்' போய்விடுவேன்!.... இதெல்லாம் பிராப்ளமே இல்லே.'' என்றேன் உற்சாகமாக. தொடர்ந்து ''யாருக்காவது மெடல் இடல் குத்திவிடும் போதுதான் பிராப்ளம் வரும்! கோட்டைத் தாண்டிப் பின் மூலை குத்திவிட்டால் ஆபத்து. எனக்கு ஒரு நாளும் இந்த சேப்டிப் பின்னை ஒழுங்காகப் போடத் தெரியாது....''




என் மனைவி குறுக்கிட்டாள். ''கண்ணாடி முன்னால் நின்று உங்கள் ஜிப்பாவுக்கு சேப்டி பின் குத்திப் பழகுங்களேன்'' என்றாள் மதி மந்திரியாக.

''என்னம்மா நீ இந்த யோசனைகளை யெல்லாம் அப்பாவுக்குப் போய்ச் சொல்லிக்கொண்டிருக்கிறாய்!... இதே பழக்கத்திலே நம்ப வீட்டு ஜனாதிபதி என்ன செய்வார் தெரியுமோ? முன்னாலே வந்து நிற்கிறவர் சட்டையில் மெடல் மாட்டுவதற்குப் பதிலாகத் தம் கோட்டிலேயே மாட்டிக் கொண்டு விடுவார். கண்ணாடிப் பழக்கம் கையைத் தன் சட்டைப் பக்கம்தான் கொண்டு வரும்'' என்று அம்மா யோசனையை என் மகள் வெட்டிப் பேசினாள்.

''அப்பா! உங்க நண்பர் ராமபத்திரன் வாசலில் நிற்கிறார். உங்களைக் கூப்பிடுகிறார்! உள்ளே வந்து போக நேரமில்லையாம்'' என்று என் பையன் அறிவிப்புக் கொடுத்தான்.

நான் எழுந்து போய்ச் சில நிமிடங்களில் பேசிவிட்டுத் திரும்பி வந்தேன். மாநாடு கலையவில்லை.

நண்பர் ராமபத்திரன் சென்ற வாரம் டில்லிக்குப் போயிருந்தார். அவரிடம் இரண்டு கம்பளி ஸ்வெட்டர்கள் வாங்கி வரச் சொல்லி யிருந்தேன். அஜ்மல்கான் ரோடிலாவது சாந்தினி சௌக்கிலாவது வாங்கி வரச் சொல்லிக் கடைகளையும் குறிப்பிட்டிருந்தேன்.

அவர் வாங்கி வரவில்லை. அவரால் வெளியில் போகவே முடியவில்லையாம். அதற்காக அவர் சொன்ன காரணம் என் சுவாரசியத்தைப் பாதித்திருந்தது.

''என்ன? வருங்கால ஜனாதிபதி வாய் திறக்காமல் இருக்கிறார்! வாசல் பக்கம் போய் வருவதற்குள் வெற்றிலையைக் குதப்பிக் கொண்டாயிற்று?'' என்று என் மனைவி இன்டி விட்டாள்.

''ஹாம்!.... இது பற்றி யோசனை பண்ணணும்! டில்லிக் குளிர் நமக்கு ஒத்துக்கொள்ளுமா? ராஷ்டிரபதி பவனுக்குள்ளே நிறைய எலக்ட்ரிக் ஹீட்டர்கள் இருக்கலாம்! வெளியிலே போறபோது முதுகிலே கட்டிக் கொண்டு போக முடியுமா? – ராமபத்திரன் இந்த சீசன்லே டில்லியிலே கடும் குளிர், தாங்க முடியாத குளிர், என்று சொல்லி விட்டுப் போனான். விலைவாசி ஏறிக் கொண்டு போவது போல வருங்காலங்களில் குளிர்த் தன்மையும் ஏறிக் கொண்டே போகலாம்! ஏறாது என்று யாராவது உறுதி சொல்ல முடியுமா?... பதவியை ஏற்றுக் கொண்டு நான் பட்டினத்திற்கு ராஷ்டிரபதி பவனை மாற்றிக் கொள்கிறேன் என்றால் நன்றாயிருக்காது!... சில நாட்களில் நம்ப ஊர்க்குளிரே தாங்கலே! விட்டுத் தள்ளுங்க!... எனக்கு ஜனாதிபதி பதவி வேண்டாம். எங்கேடா என் வெற்றிலைப் பெட்டி?....'' தேட ஆரம்பித்தேன்.

''இந்த வீட்டுக் கூடத்திலே ஒரு பேப்பரிலே 'ராஷ்டிரபதி பவன்'னு எழுதி ஒட்டுங்க! வெற்றிலையை மென்று மென்று இந்த முற்றத்துக்குப் போய்த் துப்புங்கள்!... ஆசையைப் பார்க்கலே ஆசையை!'' நொடித்து விட்டு என் மனைவி விட்ட இடத்தில் ரசத்தைக் கவனிக்க ரசனையுடன் கிளம்பினாள்.

''பாவம் அப்பா!... பதவி ஏற்காமலேயே தியாகம் செய்து விட்டார்'' என்று பாராட்டினாள் என் மகள்.

நான் வெற்றிலைக் கடைக்குப் புறப்பட்டேன். இன்று கடைக்காரர் நிச்சயம் இன்முகத்துடன் எடுத்து வைத்திருக்கும் வெற்றிலையைக் கொடுக்கலாமே!

பணம் பாதாளம் வரை பாயும் என்று சொல்வார்கள். வேறெங்காகிலும் இது பாய்கிறதோ என்னவோ, கல்கத்தாவில் இது நடப்பது உண்மை. ஆனால்....

# பாதாள ரயில் பாய்வது எப்போது?

கல்கத்தாவின் பாதாள ரயில் திட்டம் ஒரு கவையான கதை! வெள்ளையர் ஆண்ட காலத்திலேயே பேச்சளவில் இதோ, அதோ என்று பாய்ச்சல் காட்டிக் கொண்டிருந்த இந்தத் திட்டத்தை வங்கத்தின் மிகச்சிறந்த முதல்வரான டாக்டர் பி.சி. ராய் ஸ்வீகாரம் எடுத்துக் கொண்டது உண்மை. கல்கத்தாவின் வளர்ச்சி, வங்கத்தின் வளர்ச்சி என்ற அவருடைய தீர்க்க தரிசனம் வழக்கப்படி புதுடில்லியில் விலை போகவில்லை! அப்போதே புதுடில்லி இந்தத் திட்டத்திற்குப் பச்சைக் கொடி காட்டியிருந்தால், இந்த 60 கிலோ மீட்டர் பாதாள ரயில் திட்டத்திற்கு இன்று செலவிடப்படும் தொகையில் நான்கில் ஒரு பங்கு போதுமானதாக இருந்திருக்கும். இந்தத் திட்டமும் பத்து வருடங்களுக்கு முன்பே முடிந்து, அதன் விஸ்தரிப்புக்களைப் பற்றிச் சிந்திக்க வேண்டிய நேரமும் வந்திருக்கும்.

கல்கத்தாவின் மொத்தப் பரப்பளவில் உயர் ரக சாலைகள் 6 சதவிகிதம்தான். பம்பாயின் 11 சதவிகிதத்துக்கும், டில்லியின் 22 சதவிகிதத்துக்கும் உறைபோடக் காணாது. ஆனால் இந்தச் சாலைகளை உபயோகப்படுத்தும் வாகனங்களின் எண்ணிக்கையோ சுமார் இரண்டு லட்சம். கல்கத்தாவின் 5 மிலியன் பயணிகளுக்குச் சில ஆயிரம் பஸ்களும், டிராம்களும் சில நூறு ரயில்களும்தான் என்ற விதியை மாற்றியமைக்க வந்த திட்டம்தான் கல்கத்தாவின் **'பாதாள ரயில் திட்டம்'**

1972 டிஸம்பரில் கோலாகலமாக அடிக்கல் நாட்டப்படும்பொழுது இந்தத் திட்டம் எழுப்பிய கனவுகள் பல. உலகில் 54 நகரங்களில் மட்டும் இருக்கும் பாதாள (மெட்ரோ) ரயில் வசதி கல்கத்தாவுக்கும் கிடைக்கப் போகிறது என்ற மகிழ்ச்சி. இனி திருப்பதி குரங்குகளைப் போல் ஆணும் பெண்ணும் கட்டிப் பிடிக்காத குறையாய், பஸ்களிலும் டிராம்களிலும் நகர மக்கள் விழி பிதுங்க ஊசலாடிக் கொண்டு பயணம் செய்ய வேண்டாம் என்ற நம்பிக்கை. பூமிக்கடியில், நவீன வசதிகள் எல்லாம் பொருந்திய துரித வண்டிகளில் அலுங்காமல், நலுங்காமல் பிரயாணம் என்ற இறுமாப்பு. ஆனால் இந்த மகிழ்ச்சியும் எதிர்பார்ப்பும் இன்று அடங்கி விட்டது என்றுதான் சொல்ல வேண்டும். இன்று பழைய கல்கத்தா வாசிகளோ "என்ன, இந்தியாவிலேயே உங்கள் மெட்ரோதான்



✱ உருவாகி வரும் பாதாள ரயில் பாதை



✱ மெட்ரோ ரயில் நிலையத்தில் பத்திரிகை நிருபர்கள்





முதல் மெட்ரோவாமே'' என்று நீங்கள் கேட்டால் சற்றுத் துடிப்பானவர்கள் வெடிப்பார்கள்! சற்று நிதானமாகப் பேசுபவர்கள் 'வரட்டும் பார்க்கலாம்!' என்பார்கள்.

1973ல் இந்தத் திட்டத்தின் வேலை துவங்கப்பட்டது. பத்து வருடங்களில் சுமார் 300 கோடி ரூபாய் செலவில் முடித்துவிடுவோம் என்று ரயில்வே நிர்வாகம் சத்தியம் செய்தது. ஆனால் இரண்டுமே தப்புக் கணக்கு என்று இரண்டு மூன்று வருடங்களிலேயே தெளிவாகிவிட்டது. இன்றுவரை இந்தத் திட்டத்துக்குச் செலவழித்தது கிட்டத்தட்ட ரூபாய் 150 கோடி. ஆனால் இன்னும் மூன்றில் ஒரு பங்கு வேலைகூட முடியவில்லை. வானைப் பிளக்குச் சோளப் பொரியாவது கொடுப்போம் என்ற நல்லெண்ணத்தில் மெட்ரோ ரயில்வேநிர்வாகம் இந்தத்திட்டத்தின் முதல் கட்டத்தில் போடப்பட வேண்டிய டம்டம்–டோலிகஞ்ச் 16கிலோமீட்டர் பாதாள ரயில் பாதையில் கிட்டத் தட்ட 10 கிலோ மீட்டர் போட்டு விட்டோம். 1983 கடைசியிலோ அல்லது 1984லிலோ நிச்சயமாக இந்தப் பகுதியில் வண்டிகள் ஓடும் என்று உறுதி அளிக்கிறார்கள். இந்த உறுதிமொழியின் ஆழத்தைப் பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்.

கல்கத்தா பாதாள ரயில் திட்டத்தின் செலவினங்கள் ஏற ஏற, இந்தத் திட்டத்தின் உபயோகத்தைப் பற்றிய சந்தேகங்களும் வளர்ந்து வருகின்றன. ரூ. 270 கோடி மதிப்பீட்டுடன் ஆரம்பித்த இந்தத் திட்டத்தின் பணத் தேவை இப்பொழுது கிட்டத்தட்ட ரூ. 1,200 கோடி இல்லாமல் முடியாது என்ற நிலைக்கு வந்து விட்டது. டம்டம்–டோலிகஞ்ச் (16 கிலோமீட்டர்) பாதை அமைத்த பிறகு மற்ற இரண்டு கட்டங்களான சால்ட் லேக் – ராம்ராஜ் தலா (17 கிலோ மீட்டர்) இணைப்பையும் தக்ஷிணேஸ்வர்–தகர்புகர் (27 கி. மீ.) இணைப்பையும் முடிப்பதாகப் பழைய திட்டம். இப்பொழுது வேலை நடக்கும் வேகத்தைப் பார்த்தால் இந்த இரு கட்டங்களும் 1990ல்கூட முடியுமா என்பது நிச்சயமில்லை. இன்னும் ஐந்து வருடங்களில் விலைவாசிகளின் உயர்வு எப்படி இருக்கும். அது இந்தத் திட்டத்தின் செலவினங்களை எவ்வளவு கூட்டும் என்ற தலைவலி வேறு ரயில்வே நிர்வாகத்தைப் பயமுறுத்திக் கொண்டிருக்கிறது.

வங்கத்தைச் சேர்ந்த ரயில்வே மந்திரி கானி கான் சவுத்திரி வேறு சமீபத்தில் ஒரு புதுக் கரடியைக் கிளப்பி விட்டிருக்கிறார். பாதாள ரயிலின் உபயோகத்தை விட கல்கத்தாவைச் சுற்றி வரும் ஒரு வளைவு (Circuler) ரயில்வே இன்னும் உபயோகமாக இருக்கும் என்கிறார். இந்தப் பழைய யோசனையின் புதுப் பதிப்பு பாதாள ரயில் திட்டத்தைப் பாதியில் நிறுத்தும் முயற்சியின் சூசகமா, அல்லது கானிகான் அவர்களின் வழக்கமான வெற்றுக் குழப்பங்களில் ஒன்றா? ஒரு நாளைக்கு இரண்டு மிலியன் பயணிகளைச் சுமந்து செல்லும் நோக்கத்துடன் ஆரம்பிக்கப்பட்ட பாதாள ரயில் திட்டம் பாதியில் நிறுத்தப்பட்டால், கல்கத்தா பயணிகளின் நிலை பாதிக் கிணறு தாண்டியவனின் கதையாகத்தான் இருக்கும்!

ஆனால் மெட்ரோ ரயில்வே நிர்வாகிகள் திட்டத்தை முடிப்போம் என்று அழுத்தமாகச் சாதிக்கின்றனர். பத்து வருடங்களாக வளர்ந்து கொண்டிருக்கும் பாதாள ரயில் திட்ட வேலைகளுக்கு இவர்கள் கொடுக்கும் காரணங்களில் உண்மை சிறிது இருக்கத்தான் செய்கிறது. ராட்சத இயந்திரங்



களைக் கொண்டு பூமியைக் குடைந்து வேகமாகப் பாதையும் நிலையங்களும் அமைக்க முடியாத கல்கத்தாவின் களி மண் பூமி. இதுவரை அமைத்த சுரங்கப் பாதை அநேகமாகச் சாலைகளை மேலிருந்து வெட்டி, பிறகு மூடும் முறையில் அமைத்தவைதான். வேகமாகக் குடைந்து விட முடியும். ஆனால் பாதையை ஒட்டி நிற்கும் வீடுகளும் குடைசாய்ந்து விடுமே என்கிறார்கள் என்ஜினியர்கள். சில இடங்களில் வீடுகள் தாங்களும் பாதாள வீடுகளாக மாற முயன்ற உதாரணங்களும் உண்டு! இனிமேல் நாங்கள் பாதை அமைக்கும் சாலைகள் யந்திரங்களைக் கொண்டு குடைவதற்குத் தோதாக இருக்கின்றன. ஜப்பானிலிருந்து இதற்கான யந்திரங்களும் வெகு சீக்கிரம் வரவிருக்கின்றன என்று கூறுகிறார்கள் மெட்ரோ ரயில் நிபுணர்கள்.

குடைந்தோ, வெட்டியோ சந்தியில் போட்டால் சரி என்று சொல்லும் அளவுக்குப் பாதாள ரயில் திட்டம் இந்நகர்வாசிகளின் பொறுமையைச் சோதிக்க ஆரம்பித்துவிட்டது. டோலிகஞ்சிலிருந்து எஸ்பிளனேட் வரை செல்லும் பிரதான சாலை, நடுவில் வெட்டப்பட்டு ஏதோ பூகம்பத்தினால் தாக்கப்பட்ட பிரதேசத்தைப் போல் காட்சி

யளிக்கிறது. ஒரு 10 கி. மீ. தூரம் எல்லாமே ஒரே களேபரம். மண் மலைகள், யந்திரங்கள், எஃகு தளவாடங்கள் இவைகளுடன் சடுகுடு விளையாடும் வாகனங்கள், பாதசாரிகள். ஆக இது ஒரு கண்கொள்ளாக் காட்சி. கல்கத்தா வாசிகளின் பொறுமைக்குப் பாதாள ரயில் திட்டம் ஒரு நற்சான்றிதழ் என்று கூடச் சொல்லலாம்.

மெட்ரோ நிபுணர்களுக்கே இந்த நகர வாசிகளின் பொறுமையை வெறும் மண் மேடுகளைக் காட்டிச் சோதித்துக் கொண்டிருப்பது ஆபத்து என்று தோன்றியிருக்க வேண்டும். மளமளவென்று இரண்டு மூன்று பாதாள ரயில் நிலையங்களை முடித்து, சென்ற வருடம் பொதுமக்களுக்கு ஓர் ஒத்திகைக் காட்சி அமைத்துக் கொடுத்தார்கள். சராசரியில் 1.02 கி. மீ. இடைவெளியில் 17 பாதாள ரயில் நிலையங்கள் டம்டம்—டோலிகஞ்ச் பகுதியில். எல்லா நவீன வசதிகளும் கொண்ட நிலையங்கள் இவை. ஏர் கண்டிஷன் என்ன, ராட்சத விசிறிகள் என்ன, அழகான எட்டு கோச் ரேக்குகள் என்ன, திறந்த வாய் மூடாமல் பார்க்கும் ஜனங்களை, புள்ளி விவரங்கள் கொடுத்து வேறு ஒரே அமுக்காக அமுக்கி விட்டது ரயில்வே நிர்வாகம்! இந்த ஒத்திகைக் காட்சியில் சுமார் அரை மணியில் வடக்குக் கல்கத்தாவிலிருந்து, தெற்கு கல்கத்தாவுக்கு இந்தப் பாதாள ரயில் வண்டி நம்மைக் கொண்டு போய்ச் சேர்த்துவிடும். கிட்டத்தட்ட மூன்று நிமிடத்துக்கு ஒரு வண்டி, 2,500 பேர்கள் சுகமாகப் பிரயாணம் செய்யக் கூடிய வசதி, தானாக இயங்கும் கதவுகள், கம்ப்யூட்டர் இணைப்புகளுடன் மோதல் சாதலைத் தவிர்க்கும் சாதனங்கள் — பட்டியலை நீட்டிக் கொண்டே போகிறார்கள் ரயில்வே நிர்வாகிகள்.

ஆனால் கல்கத்தாவுக்கு ஒரு சாபக்கேடு உண்டு. எதுவும் நன்றாகவே தொடங்கும். ஆனால் வர வர மாமியார் கழுதையான கதைகள் பல. நகரத்தின் பிரயாண நெரிசலைத் தவிர்க்க, மினி பஸ் என்ற சிறிய, சுகமான வாகனங்களைச் சற்றுக் கூடிய கட்டணத்துடன் ஓட்ட ஆரம்பித்தார்கள். அவைகளும் இன்று குரங்குக் கூண்டுகளாகத்தான் ஓடுகின்றன. அதிகக் காசை வசூலிப்பதென்னவோ நிற்கவில்லை. பாதாள ரயிலின் 2,500 பயணிகள் உச்ச வரம்பு, 5,000மாக உயர்ந்து, புளி மூட்டை பயணமானால் ஆச்சரியப்பட முடியாது. பலவித வாகனங்களில் பிரயாணம் செய்யும் நபர்கள் தினம் ஐந்து மிலியன் என்று குத்து மதிப்பாகக் கொள்ளலாம். இந்தப் பிரயாணிகளின் அசௌகரியங்களை வாயால் சொல்ல முடியாது. இவர்கள் பெரிய அளவில் பாதாள ரயில்களுக்குப் பாயப் போவது திண்ணம். ஆக மொத்தம் பாதாள ரயிலும் பழைய கருப்பன் ஆக அதிக காலம் பிடிக்காது.

பாதாள ரயிலின் பிரயாண சுகங்களைப் பற்றி ரயில்வே நிர்வாகக் கணிப்புகள் கேட்பதற்கு நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் அவைகளில் எவ்வளவு நிறைவேறும் என்பதை இப்போது சொல்ல முடியாது. ஒன்று மட்டும் நிச்சயம். பாதாள ரயிலின் பிரயாண அசௌகரியங்கள் சத்தமில்லாமல் இருக்கும். புழுதியை வாரியடிக்காமல் இருக்கும்.

கல்கத்தாவின் பாதாள ரயில்கள் ஓடப் போவது ரப்பர் தண்டவாளங்களில்!

இந்த வருகுது, வருகுது ரயில், வருவதற்கு முன்பே, இது உருப்படாது என்று தீர்ப்பளிக்கும் நிபுணர்களுக்குக் குறைவில்லை. இணைப்புக்களில் செய்த சில மாறுதல்கள், உச்ச கட்டப் பயணிகளின் கூட்டங்களைச் சில முக்கிய நிலையங்களில் தேக்கி, ரயில் போக்குவரத்தை ஸ்தம்பிக்கச் செய்துவிடும் என்பது அவர்கள் கூற்று.

கூட்டத்தினால் பாதாள ரயில் ஸ்தம்பிக்குமோ, ஸ்தம்பிக்காதோ, மற்றொரு பற்றாக்குறையினால் பாதாள ரயில் ஸ்தம்பிக்க நல்ல வாய்ப்புண்டு. தடை இல்லாமல் ஓட பாதாள ரயில் திட்டத்துக்கு 35 மெகவாட் மின்சார சப்ளை வேண்டும். இதை வங்க மின் நிலையங்கள் கொடுக்குமா என்பதைத் தினம் பூப் போட்டுத்தான் பார்க்க வேண்டியிருக்கும். இல்லை, புது மின் நிலையங்கள் வந்துகொண்டு இருக்கின்றன; எல்லாம் நன்றாகவே நடக்கும் என்கிறது வங்க அரசாங்கம். ஆனால் வருடத்தில் பாதி நாட்கள் 8 மணியிலிருந்து 10 மணி நேரம் வரை மின்வெட்டில் அவதிப்படும் கல்கத்தாவாசிகள் இதைக் கேட்டு ஒரு சோகப் புன்னகைதான் புரிகிறார்கள்.

ஒருகால் மின்சார சப்ளை திருப்திகரமான நிலையை எட்டுவதற்காகவே பாதாள ரயில் திட்டம் ஆமை வேகத்தில் சென்று கொண்டிருக்கிறதோ என்று என்னைத் தோன்றுகிறது. இந்த மெத்தனத்தால் சிலருக்கு லாபமும் உண்டு. பாதாள ரயில் அமைப்பிற்காக எங்கும் இறைந்திருக்கும் சாதனங்களைத் திருடி விற்பது இந்நகரில் ஒரு தொழில் என்று சொல்லலாம். தினப்படி சுமார் ரூ. 2லட்சம் அளவில் சாமான்கள் திருட்டுப் போகின்றன என்பது ஒரு தனியார் காவல் துறையினரின் மதிப்பீடு. ஒருவேளை இந்த நஷ்டங்களைப் பிறகு பிரயாணச் சீட்டு கட்டண உயர்வில் வசூலித்துக் கொள்ளலாம் என்பது ரயில்வே நிர்வாகத்தின் நம்பிக்கையாய் இருக்கலாம். கல்கத்தா பாதாள ரயில் திட்டத்தைப் பொறுத்த வரையில் எல்லாமே நம்பிக்கைதான். — மாலதி ராஜகோபாலன்

படங்கள்: பானர்ஜி; ஆனந்தபஜார் பத்திரிகா



''இருக்கிற எல்லா வாரியத்துக்கும் தலைவர் நியமிச்சாச்சு! மீதி உள்ளவங்களுக்கு வாரியம் இல்லையே தலைவரே!''

''புதுசா கொள்கை வாரியம், கட்சி தாவுவோர் வாரியம், வாக்குறுதி வாரியம்னு இப்படி ஏதாவது வாரியங்கள் ஏற்படுத்திவிட வேண்டியதுதான்.''

- ஆர். பி. ராஜு

# எச்சரிக்கையின் மறுபக்கம்



**[கல்கி 20–3–83 இதழில் எச்சரிக்கை என்ற தலைப்பில் தனிப்பட்ட நிதி நிறுவனங்களைத் தடை செய்யச் சட்டமியற்ற வேண்டும் என்றும், அவர்கள் அதிக வட்டி கொடுக்கிறோம் என்று சொன்னால் விளம்பரங்களை மக்கள் நலன் கருதி வெளியிடக் கூடாதுஎன்றும் கூறப்பட்ட கருத்துக்களை வெளியிட்டிருந்தோம். இதுபற்றி தனிப்பட்ட நிதி நிறுவனங்களான, இந்து பைனான்ஸ், ஜெயசக்தி பைனான்ஸ், உதயா இன்வெஸ்ட்மெண்ட்ஸ் போன்றவற்றில் விசாரித்தபோது அவர்கள் தெரிவித்த கருத்துக்கள்.]**



“எங்களிடம் பணத்தை டெபாஸிட் செய்ய வருபவர்கள் எல்லாம், எங்கள் ஆண்டு நிதிநிலை அறிக்கையை ஆராய்ந்தும் நாங்கள் கணக்கு வைத்திருக்கும் வங்கிகளில் போய் விசாரித்துத் தெரிந்து கொண்டும் டெபாஸிட் செய்யலாம். மிகப் பெரும்பாலோர் அப்படித்தான் செய்கிறார்கள். நாங்கள் அதிக அளவில் வட்டி கொடுக்க முடிவதன் காரணம், எங்களிடம் டெபாஸிட்டாக வரும் பணத்தை உடனடியாக மற்றொருவருக்கு அதிக வட்டிக்கு விட்டு விடுவதுதான். தனிப்பட்ட (Personal) கடன்களாகத் தராமல், ஆட்டோ வாங்க, டாக்ஸி வாங்கப் பணம் தருகிறோம். பணம் வாங்கியவர்கள் எங்களிடம் பணத்தை ஒழுங்காகத் திருப்பித் தந்தால்தானே பணத்தைப் புரட்டி வியாபாரம் செய்ய முடியும். அரசாங்கமே ''வாங்கிய கடனைத் திருப்பித் தராதே'' என்ற மனநிலையை மக்களுக்கு உண்டாக்கியிருக்கிறது. இது தேசப் பொருளாதாரத்துக்கே கேடு விளைவிக்கும் போக்கு. எந்தத் தனிப்பட்ட நிறுவனமும், பர்ஸனல் லோன் கொடுப்பதைக் குறைத்துக் கொண்டு, மோட்டார் வாகனங்கள் மீதும் வீடு கட்டுவது போன்றவற்றுக்கும் பணத்தை வட்டிக்கு விட்டால் பொதுமக்களுக்கும் நல்லது: நிறுவனத்துக்கும் நல்லது.

பொதுமக்கள் தங்கள் பணம் பத்திரமாக இருக்க வேண்டும் என்று நினைத்தால், வங்கிகளில்தான் போட வேண்டும் என்கிறார்கள். ஆனால் பல தனிப்பட்ட நிறுவனங்கள் நாற்பது ஐம்பது ஆண்டுகளாக நடந்து வருகின்றன. ஏதோ இன்று ஒரு நிறுவனம் மோசடி செய்து விட்டதால் எல்லா நிறுவனங்களும் அப்படித்தான் என்று நினைத்துக் கொண்டிருப்பது சரியல்ல. இந்த ஒரு நிறுவனம் இப்படிச் செய்து விட்டதால், எங்களைப் போன்ற நிறுவனங்களுக்கும் மிகவும் தொந்தரவாக இருக்கிறது. டெபாஸிட் செய்த மக்கள் பயந்து போய் எங்களிடம் 'கட்டிய பணத்தைத் திருப்பிக் கொடுத்து விடுங்கள்' என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். நாங்கள் எந்தவித தயக்கமும் இல்லாமல் திருப்பிக் கொடுத்துக் கொண்டிருக்கிறோம். இப்போது மறுபடி நம்பிக்கை திரும்புகிறது அவர்களுக்கு.

''எங்களுக்கு ரிசர்வ் வங்கியின் கட்டுப்பாடு கிடையாது. நாங்கள் லிமிடெட் கம்பெனியாக இருந்தால் ரிசர்வ் வங்கியின் கட்டுப்பாட்டிற்குள் வரவேண்டும். ஆனால் இது போன்ற பல நிறுவனங்கள் பாகஸ்தர்கள் உள்ள நிறுவனங்களாக இருக்கின்றன. அவை எந்தவிதமான அரசாங்க ஏஜன்ஸிக்கும் பதில் சொல்ல வேண்டிய அவசியத்தில் இல்லை. வருமான வரியை மட்டும் கட்டினால் போதும். லிமிடெட் கம்பெனியாக இருந்தால் 15 சதவீதம் வட்டிக்கு மேல் தர முடியாது.

மாதா மாதம் டெபாஸிட்டுகளுக்கான வட்டியை ஒழுங்காகக் கொடுத்து வருகிறோம். பாங்கியில் ஆறு மாதத்துக்கு ஒரு முறைதான் வட்டியைப் பெற முடியும். வட்டி விகிதமும் குறைவு. மேலும் தனிப்பட்ட நிதி நிறுவனங்கள் சீட்டுக் கம்பெனியையும் சேர்த்து நடத்துவதால், பொதுமக்களுக்குப் பணத்தைச் சிக்கிரம் திருப்பித் தர வசதியாக இருக்கிறது.

–நமது நிருபர்

# டில்லியிலிருந்து....



- சென்னை நகரிலும் மற்ற இடங்களிலும் தண்ணீர்ப் பஞ்சம் பயங்கரமாக இருப்பதால், சென்னை போகும் ரயில்களில், முக்கியமாகக் கோடை விடுமுறை சீஸனில் இடம் தாராளமாகக் கிடைக்கும். இருபத்து நான்கு மணி நேரம் முன்னதாகப் போய் புக்கிங் கவுண்டருக்கு எதிரில் தவம் கிடந்து அங்கேயே உண்டு உறங்கி டிக்கட் ரிசர்வ் செய்ததை நினைத்துப் பார்க்கிறேன்.

- டில்லி குல்மோஹர் பார்க் என்ற பகுதியில் பத்திரிகையாளர்களுக்கு மனைகள் ஒதுக்கீடு செய்யப் பட்டிருக்கின்றன. அமிதாப் பச்சனின் அப்பா கவிஞர் ஹரிவன்ஷ் ராய் பச்சன் இங்கு வீடு கட்டிக்கொண்டிருக்கிறார். சமீப காலங்களில் அமிதாப் இங்கு வந்து தங்குவதால் விசிறிகள் அடிக்கடி காலிங் பெல்லை அழுத்தி, 'அமிதாப் இருக்கிறாரா?' என்று கேட்டுத் தொல்லை கொடுக்கிறார்களாம். ஆகவே வீட்டிற்குப் போலீஸ் காவல் தரப்பட்டிருக்கிறது.

# ஓ...!

- சிண்டிகேட் வங்கி எந்த வித ஜாமீனும் இல்லாமல் எண்பது லட்சம் ரூபாய் கடனாகக் கொடுத்திருக்கிறது டில்லி தமிழ்ச் சங்கத்திற்கு. ஏர்-கண்டிஷண்ட் அரங்கு கட்டுவதற்கான வேலை மளமளவென்று நடந்து வருகிறது. (தென்னிந்திய மாநிலங்களைப் போல் டில்லி தமிழ்ச் சங்கத்திலும் ராமராஜ்யம்தான் அதன் தலைவர்: திரு ராமையா!)

- யார் சொன்னது, டில்லியில் 'காந்தி' படம் சரியாக ஓடவில்லை என்று. ஷீலா தியேட்டரில் 50வது நாளாக, ஹவுஸ்ஃபுல் காட்சிகளாக ஓடிக் கொண்டிருக்கிறது.

—பி.எஸ்.ஆர்.



# சிரிப்பில் நனையலாம்

ஒருத்தி: உன்னோட வீட்டுக்காரர் இப்பல்லாம் காலைல குளிக்கறதுக்குப் பதிலா 'குளியலாசனம்' பண்றாராமே அதென்னடி புது ஆசனம்?

இன்னொருத்தி: குளிக்கிற விதம் மறந்து போகாம இருக்கிறதுக்காகக் குளிக்கிற மாதிரியே பயிற்சி செய்யறது தான்.

—அ. சிங்கார வேலு

''நாடகத்திலே ஹீரோ மயக்கம் போட்டு விழற காட்சியை ஏன் அவர் மயக்கம் போட்டு இறந்து விட்டதாக மாத்திட்டாங்க?''

''மயக்கம் தெளிய வைக்கிறதுக்குத் தண்ணீர் இல்லீங்க!''

—ஆ. ராஜேந்திரன்

''தண்ணீர்ப் பிரச்னையை சமாளிக்க வி.ஜி.பி. சகோதரர்கள் தலைமுறையில் குளிக்கிறார்களாமே! அப்படியா?''

—இரைஞானி

ஒருத்தி: முந்தியெல்லாம் ''திருப்பாவை''ல ஒரு ''பாசுரம்'' சொல்லி முடிக்கிறதுக்குள்ளே ஒரு குடம் தண்ணி அடிச்சுடுவேன். இப்ப ஒரு குடம் நிரம்ப ''சுப்ரபாதமே'' சொல்ல வேண்டியிருக்கு!

—வெ. சீதாராமன்



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

REGISTERED No. M. 4393
Registered as a Newspaper in Sri Lanka

## ஈறுகளை பலப்படுத்துவீர்.
## பற்களுக்கு நீண்ட ஆயுளை அளிப்பீர்.




## ஈறுகளை பலப்படுத்துவதற்கான விசேட அஸ்ட்ரிஞ்ஜெண்ட் அடங்கியிருப்பது போர்ஹென்ஸ் ஒன்றில்தான்.

**இதன் கிளு கிளு சுவையே இதன் செயல்திறனுக்குச் சான்றாகும்!**

ஆரோக்கியமான பற்களுக்கும் கூட பலமான ஈறுகளின் ஆதாரம் தேவை. ஈறுகள் பலவீனமாகவும், மெத்து மெத்தென்றும் இருந்தால் உங்கள் பற்களுக்கு பலமான ஆதாரம் நீடிக்காது. ஆகவேதான், போர்ஹென்ஸில் விசேட அஸ்ட்ரிஞ் ஜெண்ட் என்ற உட்பொருள் சேர்க்கப்பட்டுள்ளது. அது ஈறுகளின் திசுக்களைச் சுருக்கி கெட்டிப் படுத்துகிறது. நீங்கள் பற்களை போர்ஹென்ஸ் உபயோகித்து பிரஷ் செய்யும் போது உங்களுக்கு கிடைக்கும் கிளுகிளு உணர்வு, அஸ்ட்ரிஞ்ஜெண்ட் செயல்படுவதை காட்டுகிறது. அது ஈறுகளை பலப்படுத்தி கெட்டிப்படுத்துகிறது. ஆகவே, உங்கள் பற்கள் நீண்ட ஆயுளைப் பெறும்.

**ஆகவே, உங்கள் பற்களுக்கு பலமான ஆதாரத்தை அளியுங்கள்-உபயோகியுங்கள் போர்ஹென்ஸ்... விசேட அஸ்ட்ரிஞ்ஜெண்ட் அடங்கிய டூத் பேஸ்ட்.**



உங்கள் ஈறுகள் பலவீனமடைந்தால் ஆரோக்கியமான பற்களும் கூட பலவீனமடையும்.



போர்ஹென்ஸின் விசேட அஸ்ட்ரிஞ் ஜெண்ட் ஈறுகளின் திசுக்களை கெட்டிப்படுத்துகிறது



உங்கள் ஈறுகளை பலப்படுத்தி பற்களுக்கு நீண்ட ஆயுளை அளியுங்கள்.




**நம்பகமான போர்ஹென்ஸ்** பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட டூத்பேஸ்ட்

306F-203-TAM